## மீண்டும் வெள்ளித் திரைக்கு வருகிறது!

தமிழ் மக்களின் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட

## ஆசிரியர் "கல்கி" அவர்களின்

# தியாகபூமி

(தமிழ்)

இணையற்ற — பேபி ஸ்ரோஜா
உணர்ச்சி மிகுந்த நடிகை எஸ். டி. எஸ்.
பாபநாசம் சிவன் முதலியோர் நடித்தது
டி. கே. பட்டம்மாள் — வத்ஸலா
இவர்களின் இனிமை மிகுந்த பின்னணி சங்கீதம்



டைரக்ஷன்: கே. சுப்பிரமணியம் பி.ஏ., பி.எல்.,



அட்வைஸரி அரசாங்கம் இந்த மாசற்ற படத்துக்குத் தடையுத்தரவு பிறப்பித்திருந்தனர்.

என்?

**அது விடுதலை முழக்கம் செய்தது!**

காங்கிரஸ் அரசாங்கம் அந்த உத்தரவை ரத்து செய்தது
மைசூர் அரசாங்கமும் அதைப் பின்பற்றி யிருக்கிறது

உங்களுக்கும் உங்களுடைய குழந்தைகளுக்கும்
வருங்கால சந்ததிகளுக்கும் நல் விருந்து



பூரண உரிமையாளர்கள்:

**தில்குஷ் பிக்சர்ஸ், பெங்களூர் ஸிடி**



விநியோக உரிமைக்கு:

**தில்குஷ் பிக்சர்ஸ், 21, பிராட்வே, மதராஸ்**



வட ஆற்காடு, செங்கற்பட்டு, தென் ஆற்காடு
சித்தூர் ஜில்லாக்களுக்கு:

**பயனீர் பிக்சர்ஸ், குடியாத்தம்**

# கல்கி

## பொருளடக்கம்

மலர் 6 | இதழ் 9

1946 செப்டம்பர் 29

விய புரட்டாசி 13





நாம் வாழ்ந்திருக்கும் இந்தக் காலத்தைக் 'காந்தி யுகம்' என்றும் 'காந்தி சகாப்தம்' என்றும் வருங்கால சரித்திராசிரியர்கள் போற்றிக் கொண்டாடுவார்கள் என்று உலகத்து அறிஞர்கள் உறுதி கூறியுள்ளார்கள்.

காந்தி மகான் வாழும் இந்த நாளில் இந்தியாவில் வாழக் கொடுத்துவைத்த நாம் உண்மையில் அதிர்ஷ்டசாலிகள்தான்; அதிலும் நாளது 1946-ம் வருஷத்தில் வாழ்ந்திருப்பவர்கள் எவ்வளவோ கொடுத்து வைத்த பாக்கியசாலிகள்.

இந்தப் புண்ணிய வருஷத்தில் மகாத்மாவின் சத்தியமும் அஹிம்சையும் யாரும் எதிர்பாராத அளவில் வெற்றியடைந்தது. 'கத்தி இன்றி இரத்தமின்றி' இந்திய தேசம் சுதந்திரம் அடைந்தது. இந்தியாவின் அரசாங்கம் அன்னிய பிரிட்டிஷ் அதிகாரவர்க்கத்தின் கையிலிருந்து தேசத் தலைவர்களின் கைக்கு மாறியது.




ஒரு காலத்தில் சுவாமி விவேகானந்தர், "இந்தியாவிலுள்ள முப்பது கோடி மக்களையும் அயல் நாட்டார் முப்பது கோடிப் புழுக்களாக மதிக்கிறார்களே!" என்று மனம் உடைந்து கூறினார். முப்பது கோடி இப்போது நாற்பது கோடியாகப் பெருகிவிட்டது. இந்த நாற்பது கோடிப் பேரையும் மனிதர்களாகச் செய்து உலகோரின் மரியாதைக்கு உரியவர்களாகச் செய்தவர் மகாத்மா காந்தி. நாற்பது கோடி இந்திய மக்களின் உண்மையான பிரதிநிதி மகாத்மா காந்தி. நாற்பது கோடி மக்களின் இருதயத்தையும் 'எக்ஸ்ரே' மூலம் சோதித்துப் பார்த்தால் ஒவ்வொருவர் இருதயத்திலும் இன்று மகாத்மா காந்திதான் குடிகொண்டிருப்பார். இந்தியாவே காந்திஜி. காந்திஜியே இந்தியா என்று சொல்வது மிகையாகாது.

அத்தகைய மகா புருஷரின் ஜன்ம தினம் அக்டோபர் 2உ வருகிறது. பிரதி வருஷமும் மகாத்மா பிறந்த தினத்தைக் கொண்டாடுவதோடு மேலும் ஏழு தினங்கள் மகாத்மா வாரமாகக் கொண்டாடுவது வழக்கமாயிருந்து வருகிறது.

இந்த வருஷத்தில் முந்தைய வருஷங்களை யெல்லாம் காட்டிலும் பிரமாதமாக மகாத்மாவின் பிறந்த தினத்தைக் கொண்டாட வேண்டியது நியாயம். ஆனால் சில காரணங்களை முன்னிட்டு வெளி ஆடம்பரம் இன்றி மகாத்மா வாரத்தைக் கொண்டாட வேண்டுமென்று தலைவர்கள் கட்டளையிட்டிருக்கிறார்கள். எனவே, நமது உள்ளமாகிய கோயிலிலே மகாத்மாவின் உருவத்தைப் பிரதிஷ்டை செய்து திருவிழாக் கொண்டாடுவோமாக. பேச்சிலும் பொதுக் கூட்டத்திலும் ஊர்வலத்திலும் சக்தியை விரயம் செய்யாமல் மகாத்மாவுக்கு உகந்த காரியங்களைச் செய்வதின் மூலம் மகாத்மா வாரத்தைக் கொண்டாடுவோமாக!



கல்கி

மலர் 6 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 9

# என்ன சேதி?

## பாராட்டுகிறோம்!

தென்னிந்திய ரயில்வே மானேஜர் மிஸ்டர் ரெயினால்ட்ஸ் துரை அவர்களுக்கு நம்முடைய அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம். பாவம், இனி அவருக்கு எப்போது மீண்டும் அந்த மாதிரியான சந்தர்ப்பம் கிடைக்கப் போகிறது! காலையில் எழுந்து பத்திரிகையைப் புரட்டியதும், மிஸ்டர் ரெயினால்ட்ஸ் வெளியிட்ட அறிக்கைதானே முதல் முதலாக நம் கண்ணில் படும்! "இன்றைய தினம் 2833 பேர் வேலைக்கு வந்திருக்கிறார்கள். இனிப் பைக்குடி எக்ஸ்பிரஸ் நாளைக் காலையிலிருந்து தவறாமல் ஓடும். தண்டவாளங்கள் எல்லாம் பத்திரமாக இருக்கின்றன" என்பன போன்ற செய்திகளை வெளியிட்டுப் பொது மக்களின் கவனத்திற்கும் நன்மதிப்பிற்கும் பாத்திரமானார் அல்லவா? அதற்கெல்லாம் இப்போது முடிவு நேர்ந்திருக்கிறது.

சென்ற ஒரு மாத காலமாக நடந்து வந்த தென்னிந்திய ரயில்வேத் தொழிலாளர் வேலை நிறுத்தம் சென்ற ஞாயிற்றுக்கிழமை ஒருவகையாக முடிந்திருக்கிறது. ரயில்வே மந்திரி ஜனாப் ஆஸப் அலியின் யோசனைக்கிணங்க, ரயில்வேத் தொழிலாளர் தலைவர்கள் வேலை நிறுத்தத்தை வாபஸ் செய்திருப்பது மகிழ்ச்சிக்குரிய விஷயமாகும். வீண் கௌரவத்தையும் போலிச் சுயமதிப்பையும் பெரிதென்று கருதாமல் வேலை நிறுத்தத்தை வாபஸ் வாங்கிய தொழிலாளர் தலைவர்களையும் அவர்களுடைய முடிவுக்கிணங்க வேலைக்குத் திரும்பிய ரயில்வேத் தொழிலாளர்களையும் பாராட்டுகிறோம்.

## வாழ்த்துகிறோம்!

"வேலை நிறுத்தத்தை நிறுத்தி வேலைக்குத் திரும்புங்கள். உங்களுடைய கோரிக்கைகளைக் கட்டாயம் கவனிக்கிறேன்" என்று இந்திய தேசிய சர்க்காரின் ரயில்வே மந்திரி ஜனாப் ஆஸப் அலி சொன்னார். ரயில் வேலை நிறுத்தம் முடிவதற்குக் கூடக் காத்திராமல், ஏறக்குறைய அதே சமயத்தில் தமது வாக்குறுதியைக் காப்பாற்றி விட்டார். அதாவது வேலையிலிருந்து நீக்கப்படும் ரயில்வேத் தொழிலாளிக்கு, விசாரணை கோரித் தனது கட்சியை எடுத்துச் சொல்லும் உரிமை உண்டு என்று சொல்லி விட்டார். மேற்படி உரிமை ஏற்கனவே தென்னிந்திய ரயில்வேயில் இருந்தது. மற்ற ரயில்வேக்களில் இல்லை. சமீபத்தில் எஸ். ஐ. ஆர். ஜெனரல் மானேஜர் அந்த உரிமையை ரத்து செய்தார். இதுதான் வேலை நிறுத்தத்துக்கு முக்கிய காரணம். இப்போது ஜனாப் ஆஸப் அலி தென்னிந்திய ரயில்வேயில் மட்டுமல்லாமல் எல்லா ரயில்வேக்களிலும் மேற்படி உரிமையைத் தொழிலாளருக்கு அளித்திருக்கிறார்! அதோடு தென்னிந்தியத் தொழிலாளர் தலைவர்களைத் தம்மைக் கண்டு பேசுவதற்கும் அழைத்திருக்கிறார். இதெல்லாம் செய்ததன் பொருட்டு ஜனாப் ஆஸப் அலியை வாழ்த்துகிறோம்.

## கோருகிறோம்!

ரயில்வேத் தொழிலாளர் தலைவர்களையும், ஜனாப் ஆஸப் அலியையும் போல் நமது பாராட்டுதலுக்கும் வாழ்த்துக்கும் உரியவர்களாகும்படி சென்னை சர்க்காரையும் தென்னிந்திய ரயில்வே மானேஜரையும் கேட்டுக் கொள்கிறோம். வேலை நிறுத்த சமயத்தில் நடந்ததாகச் சொல்லப்படும் போலீஸ் கொடுமைகளைப் பற்றித் தக்கபடி விசாரித்துச் சென்னை சர்க்கார் நியாயம் வழங்க வேண்டும். ரயில்வே மானேஜர் மிஸ்டர் ரெயினால்ட்ஸ் பழி வாங்கும் மனப்பான்மையை மூட்டை கட்டி வைத்து விட்டு வேலைக்குத் திரும்பி வரும் தொழிலாளிகளை அன்போடு நடத்த வேண்டும். இந்த நமது கோரிக்கைகளை நிறைவேற்றி நம்முடைய வாழ்த்துக்

களைப் பெற்றுக் கொள்ளும்படி மேற்படி இரு சாரரையும் ரொம்பக் கேட்டுக் கொள்கிறோம்.

## சூரியனும் தீர்மானமும்

“சூரியன் அதிகாலையிலே உதித்து உலகத்திற்கெல்லாம் வெளிச்சம் கொடுப்பது மிகவும் நல்ல காரியம் என்பதை நாற்பது கோடி இந்திய மக்களும் ஒப்புக் கொள்ளுகிறார்கள்” என்பதாக யாராவது ஒரு பொதுக் கூட்டத்தில் ஒரு தீர்மானம் நிறைவேற்றினால் அது எவ்வளவு அதிசயமாக இருக்கும்! சர்வ நிச்சயமாயுள்ள மேற்கண்டதைப் போன்ற காரியங்களைப் பற்றியும் சிலசமயம் தீர்மானம் கொண்டு வந்து நிறைவேற்ற வேண்டிய அவசியம் ஏற்படுகிறது. அதுவும் ஜனநாயகமும் பேச்சுச் சுதந்திரமும் மிகுந்த காங்கிரஸ் மகா சபையைப் பற்றிச் சொல்லவே வேண்டியதில்லை. ஒவ்வொரு சிறு விஷயத்தையும் நன்றாக விவாதித்துப் பெரும்பான்மையோர் ஒப்புக் கொண்ட பிறகே காங்கிரஸ் மகாசபை அதை ஏற்றுக் கொள்வது வழக்கம்.

சென்ற வாரம் டில்லியில் கூடிய அ. இ. கா. கமிட்டிக் கூட்டம், மேலே கூறியதைப் போல சர்வ நிச்சயமும் சந்தேகத்துக்கு இடமில்லாததுமான ஒரு விஷயத்தைப் பற்றித் தீர்மானம் நிறைவேற்றியிருக்கிறது. அது என்னவென்றால், இடைக்கால சர்க்காரை ஏற்றுக் கொண்டு நடத்துவதாகக் காங்கிரஸ் காரியக் கமிட்டி செய்த முடிவை அ. இ. கா. கமிட்டி பெரும்பான்மையான ஓட்டுக்கள் மூலம் ஒப்புக் கொண்டிருப்பதுதான்.

மேற்கண்ட விஷயத்தைப்பற்றி யாருக்கும் எத்தவிதமான சந்தேகமும் இருப்பதற்கு இடமே இல்லை. உண்மையாகச் சொல்லப் போனால், காங்கிரஸ் மகா சபை சென்ற அறுபது வருஷங்களாகச் செய்துவந்த மகத்தான முயற்சிகளுக்கெல்லாம் சிகரம்போன்ற காரியம் இது என்று சொல்லவேண்டும்.

இவ்விதம் நம் தேசத் தலைவர்கள் சரியான சந்தர்ப்பத்தில் தேசத்தின் அரசாங்கப் பொறுப்பை ஒப்புக் கொண்டது மிகவும் சரியான காரியம் என்பது மட்டுமல்ல; இதற்கு முன்னால் இம்மாதிரி நேர்ந்த சில சந்தர்ப்பங்களை நழுவ விட்ட குறைபாடும் இதனால் நிவர்த்தியாகியிருக்கிறது.

இத்தகைய காரியத்திற்கு — நமது அரும் பெரும் தலைவர்கள் எவ்வளவோ தீர்க்காலோசனையுடன் ஏற்றுக் கொண்டிருக்கும் காரியத்திற்கு ஆதரவாக ஓட்டு எடுக்கவேண்டிய அவசியம் இல்லை; தீர்மானம் நிறைவேற்ற வேண்டிய அவசியமும் இல்லை. அப்படியிருந்தும் இவ்வளவு தெளிவான தீர்மானத்தையும் ஒரு சிலர் (ஏழெட்டுப் பேர்) அ. இ. கா. கமிட்டியில் எதிர்த்து வோட்டுக் கொடுத்தார்கள் என்றால் அது மிக்க அதிசயமே அல்லவா? சூரிய வெளிச்சம் உலகத்துக்கு அவசியமே இல்லை யென்று அவர்கள் கருதுகிறார்கள் போலும்!

## யாருக்கு நஷ்டம்?

அ. இ. கா. கமிட்டி நிறைவேற்றியிருக்கும் மற்றொரு முக்கியமான தீர்மானம் என்னவென்றால், இடைக்கால சர்க்காரில் பதவி வகிக்கும் காங்கிரஸ் தலைவர்கள் காரியக் கமிட்டியிலும் இருக்கலாம் என்பதேயாகும். இத்தனை வருஷ காலமாகப் பற்பல கஷ்டங்களுக்கும் இன்னல்களுக்கும் மத்தியில் தேசத்துக்குச் சரியான வழியைக் காட்டி வந்த ஒப்புயர்வற்ற தலைவர்கள் இல்லாவிட்டால் காரியக் கமிட்டிக்குத்தான் நஷ்டமே யொழிய அவர்களுக்கு ஒருவிதமான நஷ்டமும் இல்லை. நேருவும் படேலும் இல்லாத காரியக் கமிட்டியின் அந்தஸ்து எப்படியிருக்கும் என்று நினைத்துப் பார்ப்பதே கஷ்டமான விஷயம்.

‘தனிப்பட்ட நபர்கள் முக்கியம் அல்ல; ஸ்தாபனமே முக்கியம்’ என்று சிலர் வாதம் இடக்கூடும். இது எவ்வளவு தவறானது என்பதைச் சொல்லவே வேண்டியதில்லை. ஸ்தாபனம் என்பதாக எதுவும் அப்படியே ஆகாசத்திலிருந்து வந்து விழுவது இல்லை. ஒரு ஸ்தாபனத்தை நடத்தும் சக்தியும் அழிக்கும் சக்தியும் அதை நடத்தும் தலைவர்களையே பொறுத்ததாகும். ஹிட்லரைத் தலைவராகப் பெற்றதினால் ஜெர்மனி சர்வ நாசம் அடைந்தது. ஆனால் ஸ்டாலின் தலைமையைப் பெற்ற ருஷ்யா இன்று உலகத்து வல்லரசுகளுக்குள்ளே உந்நத ஸ்தானத்தை வகிக்கிறது. அதிர்ஷ்டவசமாக இன்று இந்தியாவுக்கு அத்தகைய ஆக்கும் சக்தி வாய்ந்த அரும்பெரும் தலைவர்கள் கிடைத்திருக்கிறார்கள். அவர்களை அங்கத்தினராகப் பெறாத காரியக் கமிட்டி தன்னுடைய உயர்ந்த அந்தஸ்தை இழந்தே தீரும். இதை அ. இ. கா. கமிட்டி அங்கத்தினர்களில் பெரும்பான்மையோர் ஒப்புக் கொண்டிருப்பது மகிழ்ச்சிக்குரிய விஷயமாகும்.

ஒரு பகுதியார் அதற்கு எதிராக வோட்டுச் செய்தது காங்கிரஸின் ஜன

நாயகத் தன்மையை நன்கு நிரூபிக்கிறது. ஆனால் எதிர்த்து வோட்டுச் செய்தவர்களின் சிந்தனா சக்தியை நிரூபிக்கவில்லை.

## பெஷாவருக்கு டிக்கட்!

நம்முடைய சென்னை மாகாணத்திலுள்ள ஆசிரியர்மார்கள் எல்லாம் ஒரே சமயத்தில் பெருங் கூட்டமாகக் கூடி மூட்டை முடிச்சுகளுடன் சென்ட்ரல் ஸ்டேஷனுக்குப் போய், "பெஷாவருக்கு ஒரு டிக்கெட் கொடுங்கள், ஸார்!" என்று கேட்டால் அது நமக்கு மிக்க அதிசயம் அளிக்குமல்லவா? ஆனால், இம்மாகாண உபாத்தியாயர்களின் நிலைமை இப்படியே இருந்து வந்தால் மேற்கண்ட அதிசயத்தைக் காணும்படி நேர்ந்தாலும் நேரலாம். சென்னை மாகாணப் பள்ளிக்கூடங்கள் எல்லாவற்றையும் மூடி, கதவுகளில் பெரிய இரும்புப் பூட்டுகளைப் பூட்ட வேண்டி வரலாம். அப்போது நம்முடைய குழந்தைகளுக்கு நாமேதான் எழுதப் படிக்கக் கற்றுக் கொடுக்க வேண்டி வரும் என்பதிலும் சந்தேகமில்லை.

பொருள் வளம் மிகக் குறைந்ததும் பல துறைகளில் மற்ற மாகாணங்களுக்குப் பின்னால் நிற்பதுமான எல்லைப்புற மாகாணத்தில், காங்கிரஸ் சர்க்கார் ஆசிரியர் சம்பள விஷயமாகச் செய்திருக்கும் தீர்மானம் சென்ற வாரத்தில் வெளியாகி யிருக்கிறது. அதன் பிரகாரம், ஸெகண்டரி கிரேட் உபாத்தியாயர்களுக்கு மாதம் 80 ரூபாய் சம்பளம்! கலாசாலைப் பட்டம் பெற்ற ஆசிரியர்களுக்கு நூறு ரூபாயிலிருந்து முந்நூறு ரூபாய்வரை சம்பளம்! தலைமை உபாத்தியாயர்களுக்கு 250 ரூபாயிலிருந்து 400 ரூபாய் வரை சம்பளம்!

இந்தச் சம்பள விகிதங்களைக் கண்ட சென்னை மாகாண ஆசிரியர்களுக்கு,—சென்னை சர்க்காரால் இரண்டு ரூபாய் சம்பள உயர்வு கொடுப்பதன் மூலம் அவமானப் படுத்தப்பட்ட சென்னை மாகாண ஆசிரியர்களுக்கு,—எல்லைப்புற மாகாணத்தை நினைத்து நாக்கில் ஜலம் ஊறுவது இயற்கையே அல்லவா? அவர்கள் பெஷாவருக்கு டிக்கட் வாங்கக் கிளம்பினால் அதில் வியப்புக்கு இடமிராதல்லவா?

ஆனால் சென்னை மந்திரிமார்கள் மேற்படி சம்பளத் திட்டத்தைக் கேட்ட பிறகு என்ன செய்கிறார்களோ, தெரியவில்லை. ஒரு வேளை அன்று முதல் உண்ணாவிரதம் இருக்கிறார்களோ, அல்லது வயிற்றெரிச்சலை அடக்கிக் கொள்வதற்காக ஒன்றுக்கு இரண்டு மடங்கு ரேஷன் வாங்கிச் சாப்பிட்டுக் கொண்டிருக்கிறார்களோ? — ஆசிரியர் சங்கத்தார் மறுபடியும் அவமானப்பட்டாலும் படலாம் என்று துணிந்து தூது கோஷ்டியை அனுப்பித்தான் தெரிந்து கொள்ள வேண்டும்.




அமெரிக்கப் பிரஸிடெண்ட் ட்ரூமன், வியாபார மந்திரி வாலேஸின் அந்நிய நாட்டுக் கொள்கையை முதல் நாள் ஆதரித்துவிட்டு மறு நாளே தம்முடைய அபிப்பிராயத்தை விழுங்கிய அபூர்வமான காட்சியை அமெரிக்கர்கள் பார்த்து அநுபவிக்கிறார்கள்!

# எந்தப் பதவி வேண்டும்?









" இண்டரிம் சர்க்காரில் மந்திரிப் பதவி வகிப்பதைவிடக் காங்கிரஸ் காரியக் கமிட்டியில் அங்கத்தினராயிருப்பதிலேதான் எனக்கு விருப்பம் " என்று பண்டித ஜவாஹர்லால்










நேரு கூறினார். இரண்டு பதவிகளிலும் உள்ள கஷ்டங்களை ஒத்திட்டுப் பார்க்கும்போது ஜவாஹர்லால்ஜி கூறுவதில் சந்தேகம் என்ன இருக்க முடியும்?

# யுத்தம் இல்லை, யுத்தம் இல்லை, யுத்தம் என்பதில்லையே!

பிரசித்தி பெற்ற சமாதானபுரத்துப் பஞ்சாயத்து வழக்கைப் பற்றி நேயர்கள் கேள்விப்பட்டிருப்பார்கள். மேற்படி சமாதானபுரம் என்ற ஊரில் அடிக்கடி தெருச் சண்டைகள் உண்டாகி ஒருவர் மண்டையை ஒருவர் உடைப்பதும் போலீஸார் வந்து தலையிடுவதும் மாஜிஸ்ட்ரேட்டுக் கோர்ட்டுக்குப் போவதுமாக வெகு காலமாய் இருந்து வந்தது. மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டில் கேஸ் என்று ஏற்பட்டால், அதற்குச் சண்டையில் நேராகச் சம்பந்தப்பட்டவர்களைத் தவிரச் சாட்சிக்கென்று ஊரில் உள்ள மற்றவர்களும் போக வேண்டியிருக்குமல்லவா? இதனால் சமாதானபுர வாசிகள் மற்றக் காரியம் எதையுமே செய்ய முடியாமல் போய்விட்டது. கடனும் வறுமையும் பசியும் பிணியும் அவர்களைப் பிடுங்கித் தின்னலாயின.

இந்த நிலைமையைச் சீர்திருத்த வேண்டும் என்று ஊரிலுள்ள பிரமுகர்கள் தனித் தனியாகவும் ஒன்று சேர்ந்தும் ஆலோசித்துக் கடைசியில் ஒரு தீர்மானத்துக்கு வந்தார்கள். அதாவது பஞ்சாயத்து ஒன்று ஏற்படுத்தி விடுவதென்றும், அந்தப் பஞ்சாயத்தார் ஊரில் சண்டை ஏற்படாமல் பார்த்துக்கொள்ள வேண்டும் என்றும், சண்டை ஏற்பட்டால் அதைச் சமரசமாகத் தீர்த்து வைக்கவேண்டும் என்றும் தீர்மானித்தார்கள்.

அதன்படியே பஞ்சாயத்து ஸ்தாபிக்கப்பட்டது. பஞ்சாயத்தின் முதல் கூட்டத்தில், ஊரின் இனிமேல் சண்டை வராமல் எப்படிப் பார்த்துக் கொள்வது என்று யோசனை செய்தார்கள். பஞ்சாயத்தார் தலைக்கு ஒரு யோசனை சொன்னார்கள். அந்த யோசனைகளைப் பற்றி வாதம் எழுந்தது; விவாதம் முற்றியது; குரல்கள் உயர்ந்தன; வார்த்தைகள் தடித்தன; கைகள் ஓங்கின. சிறிது நேரத்துக்கெல்லாம் பஞ்சாயத்தாருக்குள் சண்டை மூண்டு மண்டைகள் உடைய ஆரம்பித்தன. வேடிக்கை பார்க்க வந்திருந்த ஊர் வாசிகளும் அந்தச் சண்டையில் தாராளமாய்க் கலந்து கொண்டார்கள்.

உரிய காலத்தில் சமாதானபுரம் பஞ்சாயத்துக் கேஸ் கோர்ட்டில் தாக்கல் ஆயிற்று. வருஷக் கணக்காக அப்பீலும் அதற்குமேல் அப்பீலும் நடந்து கொண்டிருந்தன. கடைசி அப்பீல் முடிவதற்குள்ளே சமாதானபுரம் என்கிற ஊரே பாழாகிவிட்டது.

* * *

சென்ற சில மாத காலமாகப் பாரிஸ்மா நகரில் நடந்து வரும் சர்வதேச சமாதான மகாநாட்டின் நடவடிக்கைகள் கிட்டத்தட்ட மேற்படி சமாதானபுரத்துப் பஞ்சாயத்துக் கேஸின் போக்காகவே இருந்து வருகின்றன. இன்னும் அடிதடியும் மண்டை உடைதலும் ஆரம்பமாகவில்லை. மற்றப்படி எல்லா வைபவங்களும் நடந்து வருகின்றன. சமாதானத்தை நிலைநாட்டுவது பற்றிய விவாதங்கள் பெரும்பாலும் சண்டைக்குப் பூர்வாங்கமான விவாதங்களைப் போலவே தொனிக்கின்றன. கடைசியில் இந்த விவாதங்களின் மூலமாகவே மூன்றாவது மகாயுத்தம் ஏற்பட்டு விடுமோ என்று உலகமெங்குமுள்ள சமாதானப் பிரியர்களின் மனதில் பயம் தோன்றவும் ஆரம்பித்துவிட்டது. எனவே, அவர்களில் சிலர் ஆங்காங்கு எச்சரிக்கை செய்யவும் தொடங்கிவிட்டார்கள். அமெரிக்காவில் வாலேஸும் இங்கிலாந்தில் ஈடனும் எச்சரிக்கை செய்தார்கள்.

சமாதான மகாநாட்டின் சண்டை மூட்டும் நடவடிக்கைகள், சமாதானப் பிரியர்களின் எச்சரிக்கைகள் எல்லாம் சேர்ந்து உலகம் முழுவதிலும் ''அடுத்த மூன்றாவது உலக மகா யுத்தம் இதோ வந்து கொண்டிருக்கிறது!'' என்ற எண்ணத்தை உண்டாக்கி விட்டன. உலகத்துப் பத்திரிகைகள் எல்லாம் ஏறக்குறைய யுத்த காலத்துப் பரபரப்பை அடைந்தன. சென்ற ஒரு வருஷமாக 'ஆட்டம்' குண்டைச் சபித்துக் கொண்டு

சோர்ந்து படுத்திருந்த யுத்த தேவதை நிமிர்ந்து உட்கார்ந்து மீசையை முறுக்க ஆரம்பித்தது.

இப்பேர்ப்பட்ட அருமையான திவ்யமான சந்தர்ப்பத்தில், பாருங்கள், மற்றொரு பெரிய மீசைக்கார மனிதர், ஜெனரலிஸிமோ ஸ்டாலின் திடீரென்று தமது குரலைக் கிளப்பியிருக்கிறார்.

“யுத்தமில்லை யுத்தமில்லை
யுத்தமென்பதில்லையே!”

என்று பிரம்மாண்டமான குரல் எடுத்துப் பாடியிருக்கிறார்.

இதைக் கேட்டதும் யுத்த தேவதை தலையில் இடி விழுந்ததுபோல் திகைத்து மறுபடியும் மல்லாந்து போயிருக்கும். உலகத்திலுள்ள யுத்தப் பிரியர்கள், ஆயுத உற்பத்தி செய்யும் முதலாளிகள் முதலியோர் பெரும் ஏமாற்றமடைந்திருப்பார்கள். “ஆட்டம் குண்டின் சக்தியைச் சரியாகப் பரிசோதிக்க முடியவில்லையே?” என்று சில விஞ்ஞானிகளும் ஏமாந்து போயிருப்பார்கள். ஹென்ரி வாலெஸ் கூட “என்னத்திற்காக நாம் அவசரப்பட்டுப் பெரிய உத்தியோகத்தை இழந்தோம்?” என்று ஒருவேளை அங்கலாய்த்திருப்பார்.

மொத்தத்தில் நிமிஷத்துக்கு நிமிஷம் விறுவிறுப்பு அதிகமாகி முறுக்கு ஏறிக்கொண்டு வந்த சர்வ தேசீய நிலைமையானது விறுவிறுப்புக் குறைந்து முறுக்குத் தளர்ந்து போய்விட்டது.

சரிதான்: ஆனால் ஒரே ஒரு தனி மனிதருடைய பேச்சினால் சர்வ தேச நிலைமையில் அவ்வளவு மாறுதல் ஏற்படுவானேன். “இதோ வந்துவிட்டது” என்று தோன்றிய மூன்றாவது மகாயுத்தம் நெருங்காமல் தூரப்போய் விடுவானேன், — என்று கேட்கலாம். அதற்குக் காரணம் இருக்கிறது.

யுத்தத்தை எதிர்பார்த்தவர்கள் அது எந்த விதத்தில் எப்படி மூளும், யாருக்கும் யாருக்கும் யுத்தம் நடக்கும், — என்று எதிர்பார்த்தார்கள் என்றால், ஒரு பக்கத்தில் ஸோவியத் ருஷ்யாவும் இன்னொரு பக்கத்தில் அமெரிக்க-பிரிட்டிஷ் சாம்ராஜ்யங்களும் நின்று நடத்தும் இராஜதந்திரப் போராட்டத்தின் விளைவாக யுத்தம் மூளும் என்றுதான் எதிர்பார்த்தார்கள். பாரிஸ் மகாநாட்டில் நடந்து வரும் விவாதங்கள் — அத்தகைய எண்ணத்தை உண்டு பண்ணுவதற்கு ஆதாரமாயிருக்கின்றன. மேற்படி மகாநாட்டில் நடக்கும் காரசாரமான வாதப் பிரதிவாதங்களையும் வாய்ச் சண்டைகளையும் பெரும்பாலும் ஒரு பக்கத்தில் ருஷ்யப் பிரதிநிதியும் மற்றொரு பக்கத்தில் அமெரிக்க பிரிட்டிஷ் பிரதிநிதிகளுந்தான் முதன்மையாக நின்று நடத்துகிறார்கள்.

உதாரணமாக, சென்ற திங்கட்கிழமையன்று நடந்த ஐக்ய தேசப் பாதுகாப்புக் கௌன்ஸில் கூட்டத்தில் கூட ருஷ்யப் பிரதிநிதி கிராமிகோ அமெரிக்காவையும் பிரிட்டனையும் குத்திக் காட்டும் முறையில் ஒரு தீர்மானத்தைக் கொண்டு வந்து பேசியிருக்கிறார். எந்தெந்த தேசத்தின் சைன்யம் எந்தெந்த அயல் தேசத்தில் எவ்வளவு வைக்கப்பட்டிருக்கிறது என்று கணக்குச் சொல்லப்பட வேண்டும் என்பது அத் தீர்மானம். இதைப் பற்றிப் பேசும்போது சைனா, எகிப்து, ஈராக், பெர்ஷியா, இந்தோனேஷியா, ஐஸ்லாண்டு, கிரீஸ், ஸிரியா, லெபானன், தென் அமெரிக்க நாடுகள் ஆகியவற்றில் பிரிட்டிஷ் — அமெரிக்கத் துருப்புகள் இருப்பதைக் குறிப்பிட்டு, அந்தந்த தேசங்கள் எல்லாம் அதைக் குறித்துக் கண்டனம் செய்வதையும் எடுத்துக் கூறி கிராமிகோ விளாசியிருக்கிறார்.

இதே முறையில் பிரிட்டிஷ்-அமெரிக்கப் பிரதிநிதிகள் சமாதான மகாநாட்டில் ருஷ்யாவின் நடவடிக்கைகளைத் தாக்கிப் பேசுவது சகஜமாயிருந்து வருகிறது. இத்தகைய பரிமாறல்கள் முற்றிப் போய்க் கடைசியில் ருஷ்யாவுக்கும் பிரிட்டிஷ்-அமெரிக்காவுக்கும் யுத்தம் மூளுவதில் முடியலாம் என்ற பயம் ஏற்பட்டது.

* * *

இத்தகைய நிலைமையிலேதான் ஸ்டாலின் யுத்தத்தைப் பற்றித் தமது அபிப்பிராயத்தை ஒரு பிரிட்டிஷ் பத்திரிகை நிருபர் மூலமாகப் பட்டவர்த்தனமாக வெளிப்படுத்தினார்.

“யுத்தம் ஏற்படுவதற்குக் காரணம் இல்லை; அவசியம் இல்லை; யுத்தம் வரவே வராது!” என்று ஒரே போடாய்ப் போட்டார்.

அதோடு நிறுத்தவில்லை. யுத்தப் பேச்சின் காரணம் என்னவென்பதையும் தோண்டிக் காட்டினார். “இந்த யுத்தப் பேச்செல்லாம் வேறு நோக்கத்தை முன்னிட்டுச் சிலர் கிளப்பி விடுகிற காரியம். சில அரசாங்கங்கள் சைன்யங்களைக் கலைக்கவும், யுத்த

தளவாடங்களைக் குறைக்கவும் விரும்ப வில்லை. யுத்தப் பூச்சாண்டியைக் காட்டினால் நான் சைன்யங்களையும் தளவாடங்களையும் குறைக்காமல் வைத்துக் கொள்ளலாம் என்பதற்காக இப்படியெல்லாம் கட்டி விடுகிறார்கள்!'' என்று சாதித்தார்.

இதற்கும் மேலே இன்னும் ஒரு முக்கியமான விஷயத்தையும் சொன்னார்.

''ஆட்டம் குண்டினால் யுத்தம் ஏற்படும் என்பதற்கு இடம் இல்லை. ஏனென்றால், (1) ஆட்டம் குண்டு அவ்வளவு ஒன்றும் பிரமாதமான ஆயுதம் இல்லை; (2) ஆட்டம் குண்டு செய்யும் இரகசியம் வெகு காலம் இரகசியமாக இருந்துவிட முடியாது'' என்று நிச்சயத்துடன் கூறினார்.

ஸ்டாலின் கூறியுள்ள விஷயங்களில் இதுதான் முக்கியமானது; அர்த்த புஷ்டியுள்ளதுமாகும்.

அமெரிக்காவிலும் பிரிட்டனிலும் உள்ள முதலாளி வர்க்கத்தாரும் சாம்ராஜ்ய வாதிகளும், ''அணுகுண்டு இரகசியம் இப்போது நம் வசம் இருக்கிறது. இந்தச் சமயத்தில் ருஷ்யாவின் பேரில் யுத்தம் தொடங்கினால் ஒரே அடியாகத் தீர்த்துக் கட்டி விடலாம்'' என்று நினைக்கிறார்கள். இவர்களுக்குத்தான் மேற்கண்டவாறு ஸ்டாலின் பதில் சொல்லியிருக்கிறார். ''அணுகுண்டை நம்பி ருஷ்யாவின்பேரில் யுத்தம் தொடங்கினால் அதற்கு நான் தயாராகவே யிருக்கிறேன்'' என்ற உள்ளர்த்தம் தொனிக்கும்படி சொல்லியிருக்கிறார். இந்தமாதிரி ''நான் தயார்'' என்று குறிப்பாகச் சொல்வதனாலேயே யுத்தம் வராமல் தடைப்படும் என்று நம்பித்தான் அவ்விதம் சொல்லியிருக்கிறார்.

* * *

மொத்தத்தில், ஸ்டாலினுடைய பேச்சு ஒருவாறு யுத்த ஜுரத்தின் வேகத்தைத் தணித்திருக்கிறது என்பதில் சந்தேகமில்லை. ஆனால் யுத்த ஜுரம் இந்த உலகத்தை அடியோடு விட்டு விட்டதா என்று கேட்டால், நாம் சொல்வதற்கில்லை.

இராஜ தந்திரிகள் எனப்பட்டவர்கள் முதலில், ''யுத்தமே உதவாது; சமாதானந்தான் வேண்டும்'' என்ற பல்லவியைப் பாடிக்கொண்டிருப்பார்கள். பிற்பாடு, ''யுத்தத்தைத் தடுப்பதற்கு வழி யுத்தத்துக்குத் தயாரா யிருப்பதுதான்'' என்று சொல்லத் தொடங்குவார்கள். கடைசியில் ''யுத்தத்தைத் தடுப்பதற்கு வழி முதலில் நாம் யுத்தத்தை ஆரம்பித்து விடுவதுதான்!'' என்று சொல்லி ஆரம்பித்தே விடுவார்கள்.

யுத்தத்துக்கு உண்மையில் இரண்டு காரணங்கள் உண்டு. ஒன்று, ஆதிக்கத்திலுள்ள ஆசை; இன்னொன்று, எதிராளியிடம் உள்ள பயம். இந்த இரண்டு நிலைமைகளும் இப்போது உலகத்தில் இருக்கத்தான் இருக்கின்றன. முக்கியமாக இரண்டாவது காரணம் தற்சமயம் பலம் பெற்றிருக்கிறது. அதாவது, ''ருஷ்யா என்ன செய்யப் போகிறதோ, என்ன செய்து விடுமோ?'' என்று பிரிட்டனும் அமெரிக்காவும் பயப்படுகின்றன. அதே மாதிரி ''பிரிட்டனும் அமெரிக்காவும் என்ன செய்து விடுமோ?'' என்று ருஷ்யாவுக்கும் பயம் இருக்கிறது.

ஆகவே, ஸ்டாலினுடைய ''யுத்தமில்லை''ப் பல்லவியினால் இப்போது ஏற்பட்டிருப்பது தற்கால சாந்திதான். உண்மையிலே உலகமானது யுத்த பீதியிலிருந்து நிரந்தரமாக விடுதலையடைய வேண்டுமானால், முதலில் ஒரு தேசத்தை இன்னொரு தேசம் ஆளுவதும், ஒரு தேசத்தின் காரியத்தில் இன்னொரு தேசம் தலையிடுவதும் இல்லாமற் போகவேண்டும். அடுத்தபடியாக, யுத்தத்துக்குத் தயாராயிருக்கும் பொருட்டு யுத்த தளவாடங்களைச் சேர்ப்பது நிற்க வேண்டும்.

சுருங்கச் சொன்னால், சர்வதேச இராஜ தந்திரிகள் என்றைக்கு நம் தலைவர் மகாத்மா காந்தியைத் தங்கள் மகாநாட்டுக்கு அழைத்து அவருடைய சொற்படி நடக்க ஒப்புக்கொள்கிறார்களோ, அப்போதுதான் இந்த உலகிலிருந்து யுத்த பயமும் அபாயமும் அடியோடு நீங்கும்.

# உதவி நாடகம்

பிரும்ம ஸ்ரீ கூலமங்கலம் வைத்தியநாத பாகவதர் ஞாபகார்த்த குருகுல நிதிக்காக அக்டோபர் மாதம் 2-ந் தேதி புதன்கிழமை மாலை 6-45 மணிக்கு ஸ்ரீ சி. ஆர். சீனுவாசன் (ஆசிரியர், சுதேசமித்திரன்) அவர்கள் தலைமையில் என். எஸ். கே. நாடக சபையார் வால்டாக்ஸ் ஒற்றவாடைத் தியேட்டரில் ஒரு நாடகம் நடத்துகிறார்கள். சங்கீத அபிமானிகளும் நாடகக் கலை அன்பர்களும் மேற்படி நாடகத்துக்குத் திரளாக விஜயம் செய்யும்படி கோருகிறோம்.

# ஏகமனதான தீர்மானம்



# வான சஞ்சாரம்



இசைத் தேனீ

'சங்கீதத்தில் பாதி, சாரீர நயம்' என்று ஒரு பழமொழி உண்டு. இது 'தஞ்சாவூர் நாணு' என்ற லக்ஷ்மிநாராயண பாகவதருக்கு ஒத்துவரும். கனமும் ரஞ்சகமும் கொண்ட அவரது குரல், கணீரென்று எளிதில் காதை நிரப்பி விடுகிறது. அத்துடன் சரளமான உருப்படியும் கச்சிதமான பாணியும் சேர்ந்துவிட்டால் பாடுவதெல்லாம் வசீகரமாயிருப்பதற்குக் கேட்பானேன்? 23உ திருச்சியில் நிகழ்ந்த அவரது கச்சேரி இசை விருந்தாகவே அமைந்தது. வஸந்தா, கல்யாணி ராகங்கள் ஒழுங்கு சஞ்சாரக் கோவைகளுடன் அழகு வடிவங்களாய் விளங்கின. 'பரமபுருஷம்' உருப்படியின் நிரவல் ஸ்வரங்கள் ராகபாவம் ததும்பிக் கலகலவென்று இருந்தது. சாரீரத்தில் கனநய நாசூக்குகளையும், காலத்துக்கேற்ற கற்பனை விமரிசைகளையும் இன்னும் பெருக்கிக்கொள்ள இடமிருக்கிறது. கச்சேரி நடுவில் 8-30 மணிக்கு, கனம் டாக்டர் ராஜேந்திரப் பிரஸாத், நம் நாட்டு உணவு நிலைமையைப் பற்றி டில்லியில் 15 நிமிஷம் பேசியதைக் கேட்க நண்பர்கள் பலர் கூடியிருந்தனர். 'அரிசிப் பஞ்சம் இன்னும் மூன்று மாதம் நீடிக்கலாம்' என்பதைக் கேட்டதனாலுண்டான அவர்களது மனவருத்தம், அடுத்தாற்போல் பாகவதர் வழங்கிய சாவேரி ராகத்தின் உற்சாகத்தில் தாற்காலிகமாகவாவது மறக்கப்பட்டிருக்கும்.

வீணையை அதற்கேற்பட்ட பிரத்யேக அழகுடன் உயர்ந்த ரகமாய்க் கையாளும் பெண்மணிகளில் ஸ்ரீமதி என். விஜயா மற்றொருவர் என்பது 19உ சென்னையில் நிகழ்ந்த அவரது கச்சேரியிலிருந்து புலப்பட்டிருக்கும். கமகப் பிடிப்புகள் இப்படித்தானிருக்க வேண்டுமென்று எடுத்துக் காட்டுவதுபோல் வெகு நிதானமாயும் அழுத்தமாயும் இடம் இடமாய் நின்று நிலைத்து அனுபவித்து வாசித்தார். மத்யமகாலத்தைவிட விளம்பகாலமும் தனி ராக ஆலாபனைகளும் அவரிடம் நன்கு சோபிக்கின்றன. அன்றையக் கல்யாணியே அதற்குச் சான்றாகும். கீழிருந்து மேல் ஸ்தாயி வரை படிப்படியாய்ச் சஞ்சாரம் செய்துவிட்டு, இலைகள் நிறைந்த கொடியின் நுனியில் பூ மலர்வது போல் இறுதியில் சுருக்கமாகத் தானத்தை ஒட்டவைத்து முடித்தது மனம் கவர்ந்தது. 'ஓரஜூபு' என்ற மத்யமகால கிருதி அவர் வழிக்கு அவ்வளவு பொருத்தமில்லை என்பதற்கு அறிகுறியாக அதைச் சீக்கிரமாக முடித்து விட்டார். பிறகு ராகமாலிகையை எடுத்து அதில் 7 ராகங்களைச் சேர்த்து வாசித்ததில் ராகங்களின் வைப்பும் ஒன்றிலிருந்து மற்றொன்றுக்கு மாறும் நாசூக்கும் சிறந்து விளங்கின.



என். ராமச்சந்திரன்

18உ சென்னையில் வீணையில் ராகம் தானம் பல்லவிக் கச்சேரி செய்த வி. துரைசாமி அய்யங்கார் நல்ல அனுபவம் வாய்ந்த வித்வான். அன்று அவர் தோடி ராகத்தை ஆலாபனைக்கு எடுத்துக் கொண்டு தானமும் வாசித்துக் கற்பனை வேலைப்பாடுகளுடன் பல்லவி ராகமாலிகையும் வழங்கினார்.

* * *

20உ காலை 7-30 மணிக்கு ரேடியோப் பெட்டியைத் திறந்ததும் சென்னையிலிருந்து நல்ல உருப்படி கொண்ட நய சாரீரத்தில் வேளைக்கேற்ற பௌளிராகம் சுகமாய்க் காதில் விழுந்தது. விஜயநாகரி ராகம், உருப்படி, ஸ்வரப்ரஸ்தாரங்க ளெல்லாம் பாவச் சிறப்புடன் மதுரை மணி ஐயரின் வழியை விளக்கின. மத்யமகால விறுவிறுப்பு விசேஷமாய்க் கண்டது. பாடியவர் எம். ராமச்சந்திரன். ராக பாவ உத்ஸாகத்தில் ஸாகித்யத்தை மழுப்பாமல் தெளிவாய்ப் பாடுவதற்கும் பயிற்சி செய்துகொள்ள வேண்டும்.

அன்று அதே நிலையத்தின் பவானி கணேசன் மதுரமான குரலில் வீணையுடன் இழைந்து பாடியது சுகமா யிருந்தது. பிலஹரி, காபி ராகங்களும் உருப்படிகளும் கச்சிதமா யிருந்தன. இறுதியில் பாடிய 'மாயே' உருப்படி தரமாயிருந்தது.

அன்று திருச்சியில் கடலூர் எம். சுப்ரமணியம் நயசாரீரத்தில் நல்வழியுடன் தோடி, ஆபேரி, பைரவி, கோபிகா வஸந்த மென்று ராகங்களைச் சரளமாய்க் கையாண்டார். உருப்படிகளும் ஸ்வரப்ரஸ்தாரங்களும் விறுவிறுப்பா யிருந்தன.

22உ சென்னையில் பிற்பகலில் ஒரு மணி நேரம் கச்சேரி செய்த எம். டி. பார்த்தசாரதிக்கும் பாஸ் சாரீரம். அதைக் கூடியவரை அடக்கிப் பாவப் பொலிவாய்ப் பாடுவதினால் தான் அவர் சங்கீதம் ரஸமா யிருந்தது. அபூர்வ ராகமான பூஷாவளிக்கே அன்று முதல் ஸ்தானம் கொடுக்கவேண்டும். ஜகன் மோஹினியும் வனப்பா யிருந்தது.

அன்றிரவு சென்னையில் த்வாரம் நரஸிங்க ராவ் வாசித்த வயலின் கச்சேரியில் சாவேரி பிற ராகங்கள், சுருதி சுத்தமும் நாதப் பொலிவும் கொண்டு வெகு சுகமா யிருந்தன.

23உ திருச்சியிலிருந்து கேட்டதான வாத்யக் கச்சேரியில் மாயவரம் எஸ். ராஜம் அய்யரின் கலகலத்த சாரீரத்திலிருந்து கால் மணி நேரம் உத்ஸாகமாய் வெளிவந்த காம்போதி ராகமும் பல்லவியும் ஜோரா யிருந்தன. அதற்குப்பின் மிருதங்கம், கஞ்சிரா, டோலக், கடம், கத்து என்று தாள வாத்யங்கள் ஒரே ஜமாவாக வெளுத்துக் கட்டின. மோர்சிங்கும், கொன்னக் கோலும் சேர்ந்திருந்தால் இன்னும் அமர்க்களமா யிருந்திருக்கும்;

# அக்கப்போர்

தூமகேது

சென்னைப் பிரதம மந்திரி ஸ்ரீ பிரகாசம்காரு டில்லிக்குச் செல்லும் வழியில் பெஜவாடாவில் சில பத்திரிகை நிருபர்கள் அவரைப் பார்த்து, "தற்போதைய மந்திரி சபையின்மீது நம்பிக்கையில்லை என்றும், அதனால் மந்திரி சபையை மாற்றி அமைக்க வேண்டுமென்றும் சுமார் நூறு எம்.எல்.ஏ.க்களுக்கு மேல் கையெழுத்திட்டுக் காங்கிரஸ் தலைவருக்கு மனுச் செய்திருக்கிறார்களாமே, அதைப் பற்றித் தங்கள் அபிப்பிராயம் என்ன?" என்று கேட்டார்களாம்.

அதற்கு ஸ்ரீ பிரகாசம்காரு, "அதைப் பற்றி இப்போது ஒன்றும் சொல்வதற்கில்லை" என்றாராம்.

சென்னை எம்.எல்.ஏ.க்களுக்கு "மந்திரி சபை மீது நம்பிக்கையில்லை" என்ற செய்தியில் ஒரு வேளை பிரகாசம்காருவுக்கு நம்பிக்கையில்லையோ என்னவோ?

அதே கேள்வியை மேற்படி நிருபர்கள் கல்வி மந்திரி ஸ்ரீ அவிநாசிலிங்கம் செட்டியாரைப் பார்த்துக் கேட்டதற்கு அவர் "அப்படியா சேதி!" என்று ஆச்சரியத்துடன் கேட்டாராம்.

சென்னை எம். எல். ஏ.க்களுக்கு மந்திரி சபையிடம் நம்பிக்கை இருக்கிறதோ இல்லையோ நம்மைப் பொறுத்த வரையில் தற்போதைய மந்திரி சபையிடம் ஒரு விஷயத்தில் பரிபூரண நம்பிக்கை இருக்கிறது. அந்த நம்பிக்கை என்னவென்றால் இப்போதுள்ள மந்திரிகளுக்குத் தங்களுடைய தகுதியில் பூரண நம்பிக்கை இருக்கிறது என்பதுதான்.

* * *

மேலேகண்ட நூறு எம். எல். ஏ.க்களின் மகஜரைப் பற்றிய செய்தி சில சென்னைப் பத்திரிகைகளில் வெளியாயிற்று.

நாம் விசாரித்த வரையில், மேற்படி செய்தி வெறும் 'கப்ஸா' என்று தெரிகிறது. பிரகாசம் மந்திரி சபைக்கு ஏதாவது ஆபத்து வந்துவிடப் போகிறதே என்ற கிலி கொண்டவர்கள் கிளப்பிவிட்ட 'கப்ஸா' என்றும் சொல்லப்படுகிறது.

உண்மையில் நடந்திருப்பது என்னவென்றால், அத்தகைய "நம்பிக்கையில்லை" மகஜர் ஒன்றில் சுமார் 40 ஆந்திர எம். எல். ஏ.க்கள் கையெழுத்திட்டிருக்கிறார்களாம். தமிழ் எம்.எல்.ஏ. யாரும் இதுவரையில் கையெழுத்து இடவில்லையாம்.

* * *

ஆந்திரர்களுக்குப் பிரகாசம் மந்திரி சபைமீது நம்பிக்கை இல்லை என்பதற்கு ஏதாவது தகுந்த காரணம் இருக்க வேண்டும். ஏனெனில், ஆந்திரர்கள் மிகுந்த கட்டுப்பாடு வாய்ந்தவர்கள். இப்போதைய மந்திரி சபைமீது நம்பிக்கை இல்லை என்று சொல்லித் தங்களுக்குள் கட்சிப் பிளவை ஏற்படுத்திக் கொள்ள விரும்ப மாட்டார்கள். தவிரவும் அவர்களுக்குப் பிரகாசம் மந்திரி சபையிடம் தனிப்பட்ட கோபதாபம் இருக்கவும் நியாயமில்லை. காரணம், பிரகாசம் மந்திரி சபை ஆரம்பமானது முதற் கொண்டு இதுவரை ஆந்திரர்களுக்குத்தான் முக்கியமான உத்தியோகங்களெல்லாம் தரப்பட்டிருக்கின்றன. அப்படிப்பட்ட புதிய உத்தியோகங்கள் சிலவற்றுக்கு மந்திரிமார்களின் சம்பளத்தைக் காட்டிலும் கூட அதிகச் சம்பளம் கொடுக்கப்படுகிறது!

பின் மந்திரி சபையிடம் நம்பிக்கை இல்லை என்று ஆந்திரர்களே சொல்லுவதாயிருந்தால் அதற்குத் தற்போதைய மந்திரி சபையின் நிர்வாக ஊழல்கள் தான் முக்கிய காரணமாயிருக்க வேண்டும். அந்த ஊழல்கள் எப்பேர்ப்பட்டவை என்பது போகப் போகத் தெரியவரும்.

* * *

நிற்க. நமது பிரதம மந்திரி பிரகாசம்காரு இதையெல்லாம் லட்சியம் செய்யாமல் மாகாணத்துக்கு வேண்டிய முன்னேற்ற திட்டங்கள் பல போட்டுக் கொண்டு 'மேலிட'த்திலும் மகாத்மா காந்தி இடத்திலும் நல்ல பேர் சம்பாதிக்க மும்முரமாக முயற்சி செய்து வருகிறார்.

அதற்காக மகாத்மா காந்திக்கு மிகவும் பிடித்தமான கதர் அபிவிருத்தித் திட்டத்தைச் சென்னை மாகாணத்தின் இருபத்துநாலு ஜில்லாக்களிலும் கொண்டு வந்து ஒரேயடியாக மாகாணம் முழுதும் கதர் மயமாக்கித் துணிப் பஞ்சத்தைப் பஞ்சாய்ப் பறக்க அடித்து விடுவதென்று பிரமாதமான திட்டம் போட்டிருந்தார்.

பிரகாசம்காருவின் அளவு கடந்த உற்சாகத்தைக் கண்ட மகாத்மாஜி எங்கே கதருக்கே ஆபத்து வந்து விடுமோ என்று அஞ்சி அவருடைய உற்சாகத்துக்கும் கொஞ்சம் அணை போட்டு அடக்கிக் கதரபிவிருத்தித் திட்டத்தை முதலில் சில ஜில்லாக்களில் ஆரம்பித்துப் பிறகு கொஞ்சம் கொஞ்சமாக விஸ்தரிக்கும்படி கேட்டுக் கொண்டிருக்கிறார்!

இப்படியெல்லாம் ஸ்ரீ பிரகாசம்காரு உற்சாகத்துடன் வேலை செய்து வரும் போது அவருடைய மந்திரி சபை மீது யாருக்காவது நம்பிக்கையில்லை என்று சொன்னால் அவர் அந்தச் செய்தியில் நம்பிக்கை வைப்பாரா என்ன?

* * *

அஸ்ஸாம் மாகாணத்தில் மந்திரி சபையில் இன்னும் இரண்டு மந்திரிகளைச் சேர்த்துக் கொண்டிருக்கிறார்களாம்.

"எத்தனை மந்திரிகளைச் சேர்த்துக் கொண்டாலும், எவ்வளவுதான் சம்பளத்தைத் தூக்கிப் போட்டுக்கொண்டாலும், சம்பள விஷயத்திலும் மந்திரிகள் எண்ணிக்கையிலும் சென்னை மாகாணத்தை யாரும் எட்டிப் பிடித்துவிட முடியாது" என்கிறார் ஒரு சென்னை மாகாண வாசி!

* * *

"நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ் இப்போது எங்கே இருக்கிறார்? ருஷ்யாவில் இருக்கிறாரா? அல்லது இந்தியாவில் இருக்கிறாரா? அல்லது இப்பி பக்கிரியின் விருந்தினராக இருக்கிறாரா? எங்கே இருக்கிறார் என்று யாராவது நிச்சயமாகக் கூறமுடியுமா?" என்று எங்கெங்கும் கேட்கப்படுகிறது. பத்திரிகைகளில் தினம் ஒருவிதமாய் வரும் செய்திகளைப் பார்த்து விட்டுத்தான் ஜனங்கள் இப்படிப்பட்ட குழப்பத்துக்கு ஆளாகியிருக்கிறார்கள். நேதாஜி இருக்கும் ஒரே ஒரு இடத்தை நம்மால் நிச்சயமாகக் கூறமுடியும். அதுதான் இந்திய மக்களின் பெரும்பாலோருடைய இருதய பீடம்.

* * *

ஜாவாவிலிருந்து நெல் ஏற்றிக் கொண்டு வந்த "எம்பயர் பேவர்" என்ற கப்பலின் காப்டன் கொச்சி துறைமுகத்தில் வந்து இறங்கியதும் ஜாவா மக்கள் கட்டுவதற்குத் துணியின்றி மிகவும் கஷ்டப்படுவதாகக் கூறினாராம்.

ஜாவாவில் உணவுக் கஷ்டம் இல்லையாம். துணி இல்லாமல்தான் கஷ்டப்படுகிறார்களாம். அநேகர் கோணிகளை உடுத்திக் கொள்கிறார்களாம். ஜாவா மக்களுக்கு இந்தியர்கள் உணவுக்குப் பதிலாக உடை கொடுத்து உதவ வேண்டும் என்றும் மேற்படி காப்டன் கேட்கிறார்.

நாம் எங்கே போவது உடைக்கு? இங்கேதான் நமது ஆலை முதலாளிகளும் டெக்ஸ்டைல் டிபார்ட்மெண்டுகளுமாகச் சேர்ந்து போடுகிற போட்டில், ஜனங்கள் தலைக்கு இரண்டு கெஜம் துணிக்குத் தலை மண்டை வெய்யிலில் காயும்படி 'க்யூ'வில் நின்று அவஸ்தைப்பட வேண்டியிருக்கிறதே? இந்த லட்சணத்தில் ஜாவாவுக்கு நாம் எப்படி ஆடை உதவமுடியும்?

ஜாவா மக்களுக்கு நாம் நிச்சயமாக உதவக் கூடியது அவர்கள் நெல் ஏற்றிக் கொண்டுவந்த கோணிகளைத் திருப்பிக் கொடுத்துவிடுவதுதான். வேண்டுமானால் மேற்படி கோணிகள் நிறைய நமது அன்பையும் நன்றியையும் சேர்த்துக் கட்டி அனுப்பலாம்.

* * *

# ஆசிரியர் குரல்!



1 வேலையிலே ஒசத்தி வேலை
வாத்தியாரு வேலை யென்று
வேணளவு புகழ்ந்து வார்த்தை
சொல்லுறீர் — பழைய
பல்லவியே பாடி எம்மைக்
கொல்லுறீர்!

2 அகவிருளை அகற்றிவிட்டு
அறிவொளியை வீசு மென்று
அகமகிழச் சொல்லி விட்டால்
போதுமோ? — எங்கள்
குறைகளையே அகற்றும் என்றால்
தோஷமோ?

3 முப்பதுநாள் உழைத்துப் போட்டு
மூர்ச்சை யாகும் நேரமதில்
மூன்றும் எட்டும் வருகிறது
சம்பளம் — இதைத்
தவிர உண்டோ எங்களுக்குக்
கிம்பளம்?

4 கருப்புச் சந்தைக்காரன் அவன்
கொள்ளைப் பணம் சேர்ப்பதற்குக்
கருணையின்றி ஒண்ணுக்கஞ்சாக்
கேக்கிறான் — எங்கள்
ரத்தத்தையே உறிஞ்ச வல்லோ
பார்க்கிறான்!

5 கத்தரிக்காப் பிஞ்சு ஒன்று
காலணாவுக் கில்லை யென்று
கடைக்காரன் விரட்டு றானே
எங்களை — வீட்டில்
மனங் கசிந்து அழுகுறாளே
பெண்பளை!

6 வாயில்லாப் பூச்சி என்று
வாத்தியாரை மூலையிலே
வைத்துவிட்டார் எங்கள் காங்கிரஸ்
மந்திரி — தமது
சம்பளத்தை உயர்த்திக் கொண்டார்
தந்திரி!

7 கடவுள் துணை என்று நம்பி
திடமுடனே முயன்று வந்தால்
கவலைகளைத் தீர்த்திடுவார்
நிச்சயம் — எதற்கும்
தலைகுனியும் காலம் போச்சு
சத்தியம்!

—பி. எக்ஸ். ரங்கசாமி.



# அம்மா இருந்தால்...?

சௌந்தரம்

பகல் பன்னிரண்டு மணி யிருக்கும். காற்றே இல்லாமல் ஒரே புழுக்கமாக இருந்தது. அன்று புதன்கிழமை. குழந்தைகளுக்குக் கோடை விடுமுறை நாட்களின் ஆரம்ப தினம். அவர்கள் கூடத்தில் விளையாடிக் கொண்டிருந்தார்கள். என் கணவரும் ஆபீஸுக்குப் போய் விட்டார். நான் வீட்டு வேலைகளை யெல்லாம் முடித்து விட்டுக் கூடத்தில் உட்கார்ந்து குழந்தைகள் விளையாடுவதைப் பார்த்துக் கொண்டிருந்தேன். அப்பொழுது என்னுடைய ஐந்து வயதுக் குழந்தை பிரேமா ஓடி வந்து என்னைக் கட்டிக் கொண்டு, "சேகர் அண்ணா என்னை அடிக்க வரான், அம்மா! நீ அவனை அடி அம்மா!" என்று சொல்லிக் கொண்டே என் பின்னால் ஒளிந்து கொண்டாள். அவளைத் துரத்திக் கொண்டு வந்த எட்டு வயது சேகர் அவளை ஒரு பார்வை பார்த்துவிட்டு, "உ......ம் எனக்கும் ஒரு அம்மா இருந்தால் நானும் இப்படி தப்பெல்லாம் பண்ணிவிட்டு அவள் பின்னால் ஒளிந்து கொள்வேன்!" என்றான்.

இவ்வார்த்தைகள் என் மனத்தில் சுருக்கென்று தைத்தன. சேகரின் அம்மா இருந்தால் அவன் அவளிடம் எம்மாதிரி நடந்து கொள்வான்? அப்படியானால் நான் அவனிடம் சரியாக நடந்து கொள்ளவில்லையா? ஐயோ! அவள் ஏன் சாகவேண்டும்?—இவ்வாறு பல கேள்விகள் என் உள்ளத்தில் எழுந்து என்னை வாட்டி வதைத்தன. பலவித உணர்ச்சிகளால் உலுப்பப்பட்ட நான் அப்படியே அருகிலிருந்த ஸோபாவில் சாய்ந்து கண்களை மூடிக் கொண்டேன். என் மனம் கட்டிலடங்காத குதிரைபோல் கடந்த நாட்களை நோக்கிச் சென்றது.

•••

எனது தந்தையின் சொந்த ஊர் தஞ்சாவூர். அங்கு அவருக்கு ஏராளமான சில புலன்களும் வீடும் இருந்தன. எனக்கு இரண்டு சகோதரிகளும் இரண்டு சகோதரர்களும் உண்டு. அவர்களில் ஐந்தாவது பெண் நான். எங்கள் குடும்பம் நல்ல செல்வாக்கும் சௌகரியமும் உள்ள குடும்பம். அதிலும் கடைக்குட்டி என்று எல்லோரும் என்னிடம் அதிக அன்பா யிருந்தார்கள். என் தந்தைக்கு மற்றவர்களை விட என்னிடம் ஆசை அதிகம். அதற்காக எனக்கு மிகவும் நல்ல இடமாகப் பார்த்து விவாகம் செய்ய வேண்டுமென்று பாடுபட்டுக் கடைசியில் இந்த வரனைக் கண்டு பிடித்தார். அப்பொழுது இவர் இம்பீரியல் பாங்கில் உதவி மானேஜராக இருநூறு ரூபாய் சம்பளத்தில் இருந்தார். இவருக்குத் தாயார் தகப்பனார் இல்லை. ஒரே ஒரு தங்கை மட்டும் இருந்தாள். வீட்டில் எல்லோரும் என்னை அதிர்ஷ்டசாலி என்று கொண்டாடினார்கள். நானும் அவ்விதமே எண்ணிக்கொண்டேன். ஆனால் விவாகமாகிப் புக்ககம் வந்தவுடன்தான் என்னுடைய அதிர்ஷ்டம் எவ்வளவு என்று எனக்குத் தெரிந்தது. என்னுடைய நாத்தனாரான கமலா, பத்து மாமியாருக்குச் சமம் என்பதை நான் அப்போதுதான் உணர்ந்தேன்.

அவளுக்கு அப்பொழுது பதினைந்து வயது. ஆனால் அவள் நான்கு வயது குழந்தையைப் போல் பிடிவாதம் பிடிப்பாள். அவள் மிகவும் முன் கோபி. தான் பிடித்த முயலுக்கு மூன்றே கால் என்று சாதிக்கும் குணமுடையவள். முதலிலிருந்து அவளுக்கு என்னைக் கண்டால் பிடிப்பதில்லை. எப்பொழுதும் என்மேல் 'சள்' என்று விழுவாள். ஒன்று மில்லாததை யெல்லாம் பிரமாதப் படுத்துவாள். இதனால் எனக்கு மிகவும் கஷ்டம் ஏற்பட்டது. பிறந்தகத்தில் செல்லப் பெண்ணாக வளர்ந்த எனக்கு இந்தக் கஷ்டத்தில் என் கணவர் ஒரு ஆறுதலான வார்த்தையாவது கூறியிருக்

தாலும் அது என் புண்பட்ட மனத்திற்கு எவ்வளவோ சாந்தியை அளித்திருக்கும். ஆனால் அதுவும் பூஜ்யம். அவர் தம் தங்கை சொன்னபடியே ஆடுவார். அவள் எது கேட்டாலும் வாங்கிக் கொடுப்பார். அந்தச் சலுகையினால் அவள் என்மேல் இல்லாதது பொல்லாததை எல்லாம் அவரிடம் சொல்லுவாள். அதைக் கேட்டுக் கொண்டு அவர் என்னை அடித்தும் உதைத்தும் ஹிம்சிப்பார். நானும் எவ்வளவு நாள் சகித்துக் கொண்டிருக்க முடியும்? ஒரு நாள் என்னாலும் பொறுக்க முடியாமல் அவளுடைய குற்றத்தை எடுத்துச் சொல்லி விட்டேன்.

அவ்வளவுதான்; என் கணவர் நான்காவது அவதாரம் எடுத்துவிட்டார். அவர் இடிபோன்ற குரலில் என்னை நோக்கி, "சாந்தா, நான் உன்னை மணம் செய்து கொண்டதே கமலாவுக்காகத்தான்! அவளுக்கு ஒரு பெண் துணையாக வேண்டுமே என்பதற்காகத்தான் நான் உன்னை மணந்தது! ஆகவே அவள் இஷ்டப்படி நடந்து கொண்டால்தான் நீ இந்த வீட்டில் இருக்க முடியும். அவள்மீது இனி எவ்விதப் புகாரும் என்னிடம் சொல்லக் கூடாது— தெரிந்ததா, ஜாக்கிரதை!" என்றார்.

நான் அப்படியே வாயடைத்துப் போனேன். சரி, நாம் கொடுத்து வைத்தது அவ்வளவுதான் என்று என்னை நானே தேற்றிக்கொண்டு ஒருவாறு வாழ்க்கையை நடத்தினேன். கமலாவுக்கு விவாகமாகி, அவள் புக்ககம் சென்றாலாவது நம் கஷ்டம் தீராதா என்று நான் வேண்டிக் கொள்ளாத தெய்வமில்லை. இறுதியாக என் பிரார்த்தனையும் நிறைவேறியது. கமலாவின் கல்யாணமும் நடந்தது. அவளை மணந்தவர் ஓர் உயர்



நரப் பாடசாலையின் தலைமை ஆசிரியர். நல்ல இடம்தான். என் கணவர், தங்கையின் கல்யாணத்தை வெகு ஆடம்பரமாகச் செய்தார். அதற்காக அவர் தலை கால் தெரியாமல் கடன் வாங்கினார். புது மோஸ்தரான நகைகளும், புடவைகளும் வாங்கப்பட்டன. அவருடைய சுபாவத்தை நன்கு அறிந்திருந்த நான், "ஏன் இவ்வளவு செலவழிக்கிறீர்கள்?" என்று கேட்கவில்லை. ஆனால் என்னுடைய தாயாரும், சகோதரிகளும் என்னைப் பிடுங்கி எடுத்து விட்டார்கள். "அசட்டுப் பெண்ணே! இப்படியும் ஒருவர் பணத்தை வாரி இறைக்கிறார், பார்த்துக்கொண்டு சும்மா இருக்கிறாயே! என்னதான் இருந்தாலும் இப்படியா செலவழிப்பார்கள்? நாளைக்கு யார் இத்தனை கடனையும் அடைப்பது?" என்று எந்த நேரமும் என்னைக் கோபித்தபடியே இருந்தார்கள்.

* * *

கமலா புக்ககம் சென்ற பின் என் வாழ்க்கையில் சிறிது மாறுதல் ஏற்பட்டது. என் கணவரும் என்னை அன்பாக நடத்த ஆரம்பித்தார். கடமையை உணர்ந்த நானும் அவர் மனங் கோணாதபடி நடந்து, மிகச் சிக்கனமாக வாழ்க்கையை நடத்திக் கமலாவின் கல்யாணத்திற்காக வாங்கிய கடனை அடைத்தேன்.

கமலா கோடை விடுமுறை நாட்களில் இங்கு வந்துவிடுவாள். எனக்கு "என் பள்ளிக்கூடத்தை இப்படி மூடுகிறார்கள்!" என்று கோபம் வரும். அதற்கேற்றாற்போல் அவளைக் கண்டவுடன் என் கணவருக்கும் தலை கால் தெரியாது. பழையபடி ஆரம்பித்து விடுவார். அவருடைய இஷ்டப்படிதான் எல்லாம் நடக்கும்.

இதெல்லாம் தவிர அடிக்கடி 'பணம் அனுப்பவும்' என்று அவளிடமிருந்து கடிதம் வரும். இவ்விதமாக என் வாழ்க்கை ஒரு பக்கம் இன்பமும் இன்னொரு பக்கம் துன்பமுமாக நடந்து வந்தது.

கமலா கல்யாணமான ஒரு வருஷம் கழித்து ஓர் ஆண் குழந்தைக்குத் தாயாராகும் பாக்கியத்தைப் பெற்றாள். அக்குழந்தைக்குச் சேகர் என்று பெயரிட்டோம். இந்தப் பிரசவத்தினால் எனக்குப் பொருட் செலவும் தேக சிரமமும் அதிகமாயிற்று. கமலாவின் உடம்பும் பலஹீனப்பட்டது.

சேகருக்கு வயது மூன்றாயிற்று. கமலா இரண்டாவது தடவையாகக் கர்ப்பவதியானாள். அவள் முன்னைவிட ரொம்பவும் பலஹீனமாக இருந்தாள். இம்முறை என் குணத்தில மாறுதல் உண்டாயிற்று. நான் பழைய சாந்தாவாக இல்லை. கமலா என்னைப் படுத்தினதும், நான் அவளால் அடைந்த கஷ்டங்களும் என் இளகிய மனத்தைக் கல்லாக மாற்றிவிட்டன. என் மனத்தில் பொறாமையும் பொச்சரிப்பும் குடிகொண்டன. கமலாவைப் பழிக்குப் பழி வாங்க வேண்டுமென்ற எண்ணமே என் மனத்தில் மேலோங்கி நின்றது. ஆனால் அந்த எண்ணம் இவ்வளவு விபரீதத்தில் முடியுமென்று நான் எண்ணவில்லை.

ஒருநாள் கமலா, "எனக்குப் பலஹீனமாக இருக்கிறது; மன்னியை அனுப்பவும்" என்று தன் அண்ணாவுக்குக் கடிதம் எழுதியிருந்தாள். அக்கடிதத்தை நான் படித்து விட்டுக் கிழித்து எறிந்துவிட்டேன். அப்பொழுது என் தம்பியின் கல்யாணம் வேறு நடந்தது. அதற்காக நான் பிறந்தகம் சென்று அங்கேயே நான்கு மாதங்கள் தங்கிவிட்டேன். என் கணவருக்குக் கமலாவைப் பற்றி ஒன்றுமே தெரியவில்லை. கமலா நாளுக்கு நாள் பலஹீனப்பட்டு ஒரே படுக்கையாகப் படுத்து விட்டாள். இந்த விஷயத்தை அவளுடைய கணவர் நான் ஒத்தாசைக்கு வரவில்லை என்ற கோபத்தினால் எங்களுக்குத் தெரியப்படுத்தவில்லை.

அன்று "கமலாவுக்கு ரொம்ப ஆபத்து; உடனே வரவும்' என்று தந்தி வந்தது. எல்லோரும் புறப்பட்டுக் கமலாவின் வீட்டிற்குச் சென்றோம். அப்பொழுது இரவு மணி பத்து இருக்கும். அங்கே காணப்பட்ட காட்சி என் கல் மனத்தையும் உருக்கிவிட்டது. கமலா அடையாளம் தெரியாமல் ஒரு கட்டிலில் படுத்திருந்தாள். அவளுடைய குழந்தை பக்கத்தில் விளையாடிக் கொண்டிருந்தது. அவளுடைய கணவர் எங்களை வரவேற்று, "அவள் உங்கள் நினைவாகவே இருக்கிறாள். பிழைப்பது துர்லபம் என்று டாக்டர் சொன்னார்" என்று கவலையுடன் கூறினார்.

அப்பொழுது என் மனம் ஒரு குற்றவாளியின் மனத்தை ஒத்திருந்தது. தம்பியின் கல்யாணத்தைப் பெரிதாக நினைத்து, நாத்தனாருக்கு ஒத்தாசை செய்யாத கல் மனம் என்னுடையதல்லவா? நான் அவள் கடிதம் கிடைத்தவுடன் வந்திருந்தால்? அவளுக்குப் பண உதவியும் செய்திருந்தால்? — ஒருவேளை அவளைக் காப்பாற்றியிருக்க முடியும் அல்லவா?

இம்மாதிரியான யோசனையில் நான் ஆழ்ந்திருக்கையில் அவளது மெல்லிய குரல் என்னை இவ்வுலகத்திற்குக் கொண்டு வந்தது. நான் கட்டில் அருகில் சென்றேன். கமலாவுக்கு அப்பொழுதுதான் கொஞ்சம் மயக்கம் தெளிந்திருந்தது. "மன்னி!" என்று வெகு சிரமத்துடன் கூப்பிட்டாள்.

என் மனம் அப்படியே உருகி விட்டது. "கமலா!" என்று கதறியபடியே அவள் கைகளைப் பற்றிக்கொண்டு, "இப்பொழுது உடம்பு எப்படி இருக்கிறது?" என்று கேட்டேன்.

அவள் உதடுகள் அசைந்தன. கண்ணீர் விட்டபடி, "மன்னி! உன் அன்பே அன்பு! உன்னிடம் என்னுடைய குழந்தை சேகரை ஒப்பித்தால்தான் என் மனம் நிம்மதி அடையும். கொஞ்சம் சேகரை எடுத்து வாருங்கள்!" என்றாள்.

நான் ஓடிச் சென்று குழந்தையை எடுத்து வந்து அவள் கையில் கொடுத்தேன். அவனை முத்தமிட்டு, "மன்னி! உன் குழந்தை வேறு, என் குழந்தை வேறு என்று எண்ண வேண்டாம். நீயே இனிமேல் அவனுக்குத் தாய். அவனை நீ ஒப்புக் கொண்டால் அதுவே எனக்குப் போதும்!" என்று நாத் தழுதழுக்கக் கூறினாள்.

அவள் கையிலிருந்த குழந்தையை வாங்கிக்கொண்டு, "கமலா! இவனை என் குழந்தையைப் போலவே வளர்ப்பேன். இது சத்தியம்!" என்று நான் கூறினேன்.

அவள் முகத்தில் மகிழ்ச்சி தாண்டவமாடிற்று. பிறகு அவள் என்னை நோக்கி, "மன்னி! நீ வந்த புதிதில் நான் உன்னைப் படுத்தினேன். நீ அதை மனதில் வைத்துக் கொள்ளாமல் என் குழந்தையைக் காப்பாற்றுவதற்கு ஒப்புக் கொண்டாய். எப்படியோ நீ அந்தக் குற்றங்களை மறந்து என்னை மன்னிக்க வேண்டும்" என்றாள்.

"கமலா! உன்னை எதற்காக மன்னிக்க வேண்டும்? நீ ஒரு குற்றமும் செய்யவில்லையே! அவையெல்லாம் சிறு வயதில் நீ செய்த குறும்புகளல்லவா?" என்றேன்.

* * *

கமலாவின் காரியங்கள் முடிந்தவுடன சேகருடன் நானும் என் கணவரும் பட்டணம் வந்து சேர்ந்தோம். அன்று முதல் நான் சேகரை என் குழந்தையாகவே பாவித்து வருகிறேன். அவன் வந்து சேர்ந்த இரண்டு வருடங்களுக்குப் பிறகு தான் எனக்குப் பிரேமா பிறந்தாள். அவர்கள் இருவரையும் என் கண்களின் இரு கரு மணிகள் போல நான் வளர்த்து வருகையில், அவன் இன்று கூறிய வார்த்தை என் மனத்தில் பெரும் புயலை எழுப்பி விட்டது. அவன் ஏன் அவ்வாறு கூறினான்?

எவ்வளவு நேரம் நான் இவ்விதம் யோசித்துக் கொண்டே உட்கார்ந்திருந்தேனோ எனக்குத் தெரியாது.

"அம்மா! பசிக்கிறது, சாதம் போடு, அம்மா!" என்ற பிரேமாவின் குரலைக் கேட்டுத் திடுக்கிட்டு எழுந்தேன்.

"எனக்கும்தான் வேணும்!" என்றான் சேகர்.

"உனக்கும்தான் கண்ணே!" என்று நான் அவனைத் தூக்கி இடுப்பில் வைத்துக் கொண்டு சமையலறைக்குச் சென்றேன்.

---



★

## மாமா சொன்னார்!

விருந்தாளி:—என்னடா, அம்பி! என்னையே பார்த்துக்கொண்டிருக்கிறாய்?

அம்பி:—உங்கள் மூஞ்சியிலே 'முட்டாள்' என்று எழுதி ஒட்டியிருக்குமென்று மாமா சொன்னார்; காணுமே என்று பார்க்கிறேன்!

★

# படித்துப் பார்!

## எல்லைப்புறச் சண்டை

[ஆசிரியர்: துமிலன்; பிரசுரம்: தமிழ்ப் பண்ணை; தியாகராய நகர், சென்னை; விலை: ரூ. 1.]

எந்த எல்லையில் நடந்த சண்டை? யாருக்கும் யாருக்கும் நடந்த சண்டை? எப்போது நடந்த சண்டை? — என்றெல்லாம் கலவரமடைந்து கேட்கத் தோன்றுகிறது இந்தப் புஸ்தகத்தின் தலைப்பைப் பார்க்கும்போது!

வாஸ்தவத்தில் தியாகராஜநகரில் ஸ்ரீமான் முத்துசாமி அய்யருக்கும் கைலாசமய்யருக்கும் நடந்த சண்டைதான் என்று அறியும் போது எல்லையில்லாத மகிழ்ச்சியுண்டாகிறது.

மேற்படி ஐயர்கள் இருவரும் நெருங்கிய நண்பர்கள், பால்ய சிநேகிதர்கள். இருவரும் மாம்பலத்தில் ஒரே தெருவில் இரண்டு வீடு சேர்ந்தாற்போல் வாங்கினார்கள் என்றால் அவர்களுக்குள் எவ்வளவு அன்னியோன்யம் இருந்திருக்க வேண்டும்?

இத்தகைய நண்பர்களுக்குள் சண்டையைக் கிளப்பியது அவர்களுடைய வீட்டின் எல்லை தான்; அதாவது வேலிதான்!

எல்லை விஷயமாக மூண்ட யுத்தம் வலுக்கிறது: 'மாஜினாட் அரண்'கள் எழும்புகின்றன. 'பொருளாதார முற்றுகை' போடப்படுகிறது! 'ஐந்தாம் படை'யும் பிரமாதமாக வேலை செய்கிறது!

ஆமாம்: வீட்டுச் சண்டையில் இவ்வளவும் வருகிறது. புஸ்தகத்தின் முதல் பக்கத்திலிருந்து கடைசி பக்கம் வரை நகைச்சுவை சுழிந்து சுழிந்து ஓடுகிறது. தமிழ்நாட்டிலுள்ள இரண்டு தலைசிறந்த நகைச்சுவை ஆசிரியர்கள் யார் என்று யோசித்தோமானால் எஸ். வி. வி. அவர்களும் துமிலன் அவர்களும் தான் நம் மனக் கண் முன்னால் தோன்றுவார்கள். இவ்விருவரில் யார் முதல், யார் இரண்டாவது என்று கேட்போமானால், பதில் சொல்லுவது சிரமமான காரியந்தான். எஸ். வி. வி.யின் நகைச்சுவையில் எளிமையும் சரளமும் அதிகமாயிருக்கும். துமிலனுடைய நகைச்சுவையிலோ எதிர்பாராத திடுக்கிடல்களும் திருகுதாளங்களும் தூக்கிவாரிப் போடல்களும் அதிகமாயிருக்கும். இந்த எல்லைப்புறச் சண்டையில் துமிலனுடைய நகைச்சுவை எல்லையை அடைகிறது என்று சொல்லலாம்.

இவ்வளவு அழகிய புஸ்தகத்தைத் தமிழ்ப் பண்ணைக்காரர்களைத் தவிர்த்து வேறு யார் வெளியிடுவார்கள் என்று நாம் அதிசயமோ ஆச்சரியமோ கொள்ளாமல் முடிவு செய்தாலும், விலையைப் பார்க்கும் போது, "அட! ஒரு ரூபாய்தானா?" என்று வியப்படையாமலிருக்க முடியவில்லை.

## காந்தி வழி

[ஆசிரியர்: பொ. திருகூடசுந்தரம் பிள்ளை; பிரசுரம்: இலக்கியப் பண்ணை, ராயப்பேட்டை, சென்னை; விலை: ரூ. 1.]

சென்ற முப்பது வருஷ காலமாக மகாத்மா காந்தியடிகளிடத்தில் பரிபூரண பக்தியும், அவர் தலைமையில் மட்டற்ற நம்பிக்கையும், அவர் காட்டிய அஹிம்சா நெறியில் அளவு கடந்த ஊக்கமும் கொண்டதால் இன்று நமது தேசத்தின் ஒப்பற்ற தலைவர்கள் டில்லியில் சேர்ந்து தேசத் தொண்டு செய்ய நாம் பார்க்கக் கொடுத்து வைத்திருக்கிறோம்.

'அப்படியானால் இந்தக் காந்தி காட்டிய வழிதான் என்ன?' என்று இத்தனை நாளாகப் பார்த்து வரும் நமக்கே ஒரு ஆசை தோன்றுகிறது! அத்தகைய ஆசையைப் பூர்த்தி செய்ய ஸ்ரீ பொ. திருகூடசுந்தரம் பிள்ளை காந்தி வழி என்றொரு புத்தகம் எழுதியிருக்கிறார்.

அதில் கடவுளைப் பற்றியும் அஹிம்சையைப் பற்றியும், உண்ணாவிரதத்தைப் பற்றியும், நிர்மாணத் திட்டத்தைப் பற்றியும் இன்னும் பல விஷயங்களைப் பற்றியும் காந்தி மகான் கொண்டுள்ள அபிப்பிராயங்களை அப்படியே தொகுத்துக் கொடுத்திருக்கிறார். இதை நல்ல முறையில் இலக்கியப் பண்ணையார் வெளியிட்டிருக்கிறார்கள்.

## அம்பி

[ஆசிரியர்: பாசாக; பிரசுரம்: பாசாக காரியாலயம், அரண்மனைக்காரத் தெரு, சென்னை; விலை. ரூ. 1.]

பிரசித்தி பெற்ற பெரிய மனிதர்கள் தங்கள் வாழ்க்கையில் கண்டவற்றை சொன்னார் குறித்து வைத்து அதை ஒரு புத்தகமாகப் பிரசுரித்துத் தங்கள் பெயரை இன்னும் பிரசித்தியாக்கிக் கொள்கின்றனர். அவர்கள் தங்கள் ஆயுளில் அரை நூற்றாண்டாவது கழிந்தால்தான் தங்கள் அபிப்பிராயங்களை வெளியிடத் துணிகிறார்கள். ஆனால் இந்த 'அம்பி'யின் கட்சி அப்படியில்லை. யாருடைய விருப்பு வெறுப்புகளையும் கவனியாமல் தன் அபிப்பிராயங்களை வெட்டு ஒன்றும் துண்டு இரண்டுமாக வெளியிடுகிறான்.

தமிழ் நாட்டு அம்பிகளின் உள்ளக் கொந்தளிப்பு, இருதயத் துடிப்பு இவைகள்தான் இந்தப் புத்தகத்தில் அம்பி கையாண்டிருக்கும் விஷயங்கள். பண்டிகைகளைக் கொண்டாட வேண்டிய விதத்தைப் பற்றியும், விடுமுறை நாட்கள் விட வேண்டிய விதத்தைப் பற்றியும் அம்பி தெரிவிக்கும் அபிப்பிராயங்களை எந்த அம்பியும் மறுக்க முடியாது!

---

## நல்ல யோசனை



பையன்:—ஏன், அப்பா! இந்தப் பழைய ரேடியோ பழைய பாட்டையே திரும்பித் திரும்பிப் பாடிண்டிருக்கே! புது ரேடியோ வாங்கி வைத்தால் புதுப் பாட்டாகப் பாடாதோ?

# கருப்பனும் கள்வனும்

சி. ஆர். ஆர்.

ஒரு தனவானுக்குப் பெரிய தோட்டமிருந்தது. அவர் அடிக்கடி வெளியில் போவார். ஊரில் திருட்டு அதிகமாகவே, அவர் இரண்டு நாய்களை வாங்கி வந்தார். ஒன்று நல்ல ஆஸ்திரேலிய ஜாதி வேட்டை நாய். அதற்கு டைகர் என்று பெயர் வைத்திருந்தார்கள். டைகரைத் தன் மகன் சங்கரனைப் பார்த்துக் கொள்ளச் சொன்னார். சங்கரன் அதற்கு நல்ல சங்கிலி வாங்கி வாசல் வராந்தாவில் கட்டி வைத்தான். டைகருக்குப் பிஸ்கோத், தயிர்ச் சாதம், மாமிசம் முதலிய நல்ல ஆகாரம் கொடுத்து வந்தார்கள்.

இன்னொரு பட்டி நாயைத் தோட்டக்காரனின் மகனான குப்பன் வளர்த்தான். அதைக் கருப்பன் என்று கூப்பிட்டார்கள். அது எப்பொழுது பார்த்தாலும் தோட்டத்தில் திரிந்துகொண்டிருக்கும். செடி கொடிகளை மேய வரும் ஆடுமாடுகளைத் துரத்தி யடிக்கும். அதற்குப் பாலில் நனைத்த ரொட்டித் துண்டு தான் தின்னக் கிடைக்கும். டைகர் அதோடு விளையாடப் போனால் சங்கரன் அதை இழுத்து வந்து விடுவான். கருப்பனோடு விளையாடினால் டைகர் அசுத்தமாய் விடுமென்று சங்கரன் நினைத்தான். பாவம், நாய்களுக்கு இந்த ஜாதி பேதம் தெரியுமா? ஆகவே, அவை எஜமானர்களுக்குத் தெரியாமல் விளையாடுவதுண்டு.

ஒரு நாள் அந்த வழியாய்ப் போன திருடன் ஒருவன் இந்த இரு நாய்களையும் கவனித்தான். அவன் டைகருக்கு இரண்டு நாள் பிஸ்கோத்து கொடுத்துப் பழக்கினான். மூன்றாம் நாள் இரவு மயக்க மருந்து கலந்த பிஸ்கோத்தைத் தந்தான். டைகர் அதைச் சாப்பிட்டுத் தூங்கிவிட்டது. திருடன் கன்னம் வைத்து வீட்டிற்குள் புகுந்து தனவான் படுக்கை யறைக்குள் சென்றான். அவருடைய சட்டையிலிருந்த சாவியை எடுத்து இரும்புப் பெட்டியைத் திறந்து நகை, ரூபாய் முதலியவற்றை எடுத்துத் தான் கொண்டு வந்திருந்த பையில் போட்டுக் கொண்டான். அப்போதும் தனவான் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தார். அது தான் சமயமென்று திருடன் கன்னம் வைத்த வழியாய் வெளியேறப் பார்த்தான்.

அதுவரை திருடனுடைய செய்கைகளை யெல்லாம் கவனித்து வந்த கருப்பன், அவன் கன்னம் வைத்ததின் காரணமாக ஏற்பட்ட துவாரத்தை அடைத்து நின்றுகொண்டு அவனை வெளியே போகவிடாமல் தடுத்தது. திருடன் அதற்குப் பிஸ்



கோத்துகளைப் போட்டான். கறுப்பன் அதைத் தொட வில்லை. திருடன் அதை வெளியே தள்ளி விட்டுப் போக முயன்றான். அதற்குள் கறுப்பன் எஜமான் காலைத் தீண்டி எழுப்பி விட்டது. தனவான் எழுந்து திருடனைப் பிடித்துக் கொண்டார்.



தகவல் கிடைத்ததும் போலீஸ்காரர்களும் விரைந்து வந்து திருடனுக்கு விலங்கிட்டார்கள்.

அத்தனை நேரமும் அங்கே நடந்தவற்றை யொன்றும் கவனிக்காமல் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்த டைகரைக் கண்டதும், தனவான் அதை ஆத்திரத்துடன் அடிக்கப் போனார். போலீஸ்காரன் அவரைத் தடுத்து, "திருடன் அதற்கு மயக்க மருந்து போட்ட பிஸ்கோத்து கொடுத்திருப்பான்!" என்று சொன்னான். அதற்கேற்றாற் போல் திருடன் கன்னம் வைத்த இடத்தில் தனவான் சில பிஸ்கோத்துகள் கிடந்ததைக் கண்டார். அதைக் கறுப்பனுக்குப் போட அது சாப்பிட மறுத்து விட்டது. அதை நுகர்ந்து பார்த்த போலீஸ்காரன், 'இந்தப் பிஸ்கோத்தில் கஞ்சா கலந்திருக்கிறாயா?" என்று திருடனைக் கேட்டான். "ஆம்" என்பதற்கு அடையாளமாகத் திருடன் தலையசைத்தான்.

அன்று முதல் கறுப்பனுக்கும் நல்ல உணவு கிடைத்தது. சங்கரனும் கறுப்பனோடு விளையாடப் போகும் டைகரைத் தடுப்பதில்லை.

# பெரியப்பாவின் உயில்

கபஸ்ரீ

கந்தசாமி அன்று யார் முகத்தில் விழித்தாரோ, சென்ற இடமெல்லாம் அதிர்ஷ்டம் அவனைப் பின் தொடர்ந்தது. தனது கைத்திறனை வெள்ளாம் காட்டி 'பஸ் ஸ்டாண்'டுக் கருகில் நரைத்த தலை மனிதர் ஒருவர் பையிலிருந்த கனத்த மணிபர்ஸை 'அபேஸ்' பண்ணினான். அடா நசித்திரமே! முழுசாக ஒரு ரூபாய் சில்லறைகூட இல்லையே? அதற்குப் பதிலாகக் கத்தை கடிதங்கள் தான் காணப்பட்டன. அவற்றில் ஒன்று கந்தசாமியின் கவனத்தைக் கவர்ந்தது.

நண்பர் நடராஜனுக்கு.

தங்கள் கடிதம் கிடைத்தது. தாங்கள் எழுதியிருந்தபடி நானே புதன்கிழமை இரவு 8-30 மணிக்கு, நமசிவாய முதலியார் தெருவிலிருக்கும் எனது வீட்டிற்குப் பெரியப்பாவின் உயிலுடன் வரவும். மேற்கொண்டு செய்ய வேண்டியதைப் பற்றிப் பிறகு யோசிப்போம்.

தங்கள்
முருகேசம் பிள்ளை.



இதைப் படித்து முடித்ததும் கந்தசாமியின் முகம் மலர்ந்தது. எப்படியாவது இந்த உயிலைத் 'தட்டிவிட' எண்ணினான்.

புதன்கிழமை இரவு எட்டு மணிக்கு நரைத்த தலை நடராஜன் கையில் கட்டுப் பேப்பருடன் அவசர அவசரமாக நமசிவாய முதலியார் தெரு முனையில் திரும்பினார்.

ஐயையோ! இது என்ன? அவர் தலைக்கு மேல் தடி ஓங்கப்பட்டது. 'படார்' என்ற சத்தம்! அதைத் தொடர்ந்து, 'ஐயோ!' என்ற கூக்குரல்! அவர் கையிலிருந்த பேப்பர்களை யெல்லாம் அவரைக் கீழே வீழ்த்திய கந்தசாமி எடுத்துக் கொண்டு மறைந்தான்.

வீட்டை யடைந்த கந்தசாமி, படபடப்புடன் உயிலைப் படிக்க ஆரம்பித்தான்.

அட, எழவே! இதற்குத் தானா இவ்வளவு சிரமம்?— நாடகாசிரியர் நடராஜனால் ஸ்ரீ 'கிருஷ்ண நாடக சபா' விற்கு எழுதப்பட்ட 'பெரியப்பாவின் உயில்' என்ற நாடகத்தின் கைப்பிரதி, அது!

## தீபாவளி!

கொள்ளேகாலம் ஆரணி பட்டுப் புடவைகளுக்கு சிறந்த இடம்.




## ஆரணி ஸில்க் ஹவுஸ்

4 சன்னதித் தெரு, மயிலாப்பூர், மதராஸ்

போன்: 86349

CHITRALAYA

சகல விதமான சரும வியாதிகளுக்கும்




உபயோகியுங்கள்

•

படை, எக்ஸிமா, கொப்புளங்கள், ரணங்கள், முகப்பரு, சிரங்கு, வெட்டுக் காயம், அடிபட்ட காயம் முதலியவைகளுக்கு சிறந்த ஔஷதம்.

•

ஜெர்மெக்ஸ் கிருமிகளைக் கொன்று காயங்களை ஆற்றுகிறது.




## லிட்டில்ஸ் ஓரியண்டல் பாம் & பார்மசூடிகல்ஸ் லிமிடெட்,

11-12, முதல் லைன் பீச், சென்னை

# காலக்ஷேபம்

### கொடுத்தது!

"ஏன் ஐயா, நீர் அந்த மளிகைக் கடையில் வாங்கின சாமானுக்குப் பாதிப் பணத்தைத் தான் கொடுத்தீராம்: இன்னும் பாதிப் பணத்தைக் கொடுக்கவில்லை என்று கடைக்காரன் உம்மை அறைந்து விட்டானாமே? வாஸ்தவமா?"

"ஆமாம்: நான் உடனே திருப்பிக் கொடுத்து விட்டேனே."

"சாமானையா?"

"இல்லை ஐயா, அறையைத்தான்!"



### நிபந்தனை

டைரக்டர் (திருடனாக நடிப்பவரை நோக்கி):—அந்தப் பெண்ணின் கழுத்துச் சங்கிலியை நீ அறுத்துக்கொண்டு ஓடுவதைப் பார்த்தால் சினிமாவுக்காக நடிப்பதுபோல் இருக்கக் கூடாது; நிஜமாகவே நடப்பது போல் இருக்க வேண்டும்.......

திருடனாக நடிப்பவர்:—எனக்கு ஆக்ஷேபணையில்லை, ஸார்! ஆனால் தாங்கள் என்னைப் போலீஸார் வசம் ஒப்புவிக்காமல் இருக்க வேண்டும்!



### காரணம்!

வாத்தியார்:—ஏண்டா, நீ உன்னுடைய கணக்குகளையெல்லாம் அந்தப் பழைய பத்தாம் பசலி வழியிலேயே போட்டுக் கொண்டு வருகிறாயே, ராமுவைப் பார்த்தாயா?—அவன் எப்படிப் புது வழியில் போட்டுக்கொண்டு வருகிறான் என்று?

பையன்:—பார்த்தேன், ஸார்! ஆனால் அவனுக்கு அப்பா இருக்கிறார்; எனக்குத் தாத்தாதானே இருக்கிறார்?



### இஷ்டமில்லை!

நாகர்:—உமக்கு இரண்டாந் தாரமாகக் கல்யாணம் செய்துகொள்ள உத்தேசமுண்டா?

அவர்:—இல்லவே இல்லை; கொஞ்ச காலம் சந்தோஷமாயிருக்கலாமென்று எண்ணியிருக்கிறேன்!

### உதாரணம்

மாஜிஸ்ட்ரேட் (சாட்சியை நோக்கி):—அவன் அவரைக் கடிக்கும்போது நீ பார்த்தாயா?

சாட்சி:—இல்லை; கேட்டேன்!

மாஜிஸ்ட்ரேட்:—அப்படியானால் உம்முடைய சாட்சியத்தை ஒப்புக்கொள்ள முடியாது!

இந்தச் சமயத்தில் சாட்சி 'விஸிட்டர்'கள் இருந்த பக்கம் திரும்பி இரைந்து சிரித்தார்.

மாஜிஸ்ட்ரேட் (கோபமாக):—ஏன் சிரிக்கிறீர்?

சாட்சி:—என்ன, சிரித்தேனா! நான் சிரித்ததை நீர் எப்படிப் பார்த்தீர்?

மாஜிஸ்ட்ரேட்:—பார்க்கவில்லை; கேட்டேன்!

சாட்சி:—அப்படியானால் நீர் சொல்வதையும் நான் நம்ப முடியாது!



### விழக் கூடாது!

நண்பர்:—என்ன, ஸார்! அத்தனை அக்கறையாக அந்தத் தினசரிப் பத்திரிகையில் என்னத்தைக் கத்திரித்து எடுத்துக் கொண்டிருக்கிறீர்?

அவர்:—ஒன்றுமில்லை, இந்தப் புடவை விளம்பரங்கள் இருக்கிறது பாருங்கோ, அவற்றைத்தான் கத்திரித்து எடுத்து விடுகிறேன். இந்தக் கஷ்ட காலத்தில் அந்த விளம்பரங்களெல்லாம் அவள் கண்ணில் விழுந்து வைக்கக் கூடாதல்லவா?



### கடைசி வார்த்தை!

ஜட்ஜ்:—நீ எங்கேயாவது வேலை பார்த்திருக்கிறாயா?

கைதி:—பார்த்திருக்கிறேன்.
ஜட்ஜ்:—எங்கே?
கைதி:—எங்கும் பார்த்திருக்கிறேன்.
ஜட்ஜ்:—என்ன வேலை பார்த்திருக்கிறாய்?
கைதி:—எல்லா வேலையும் பார்த்திருக்கிறேன்.

ஜட்ஜ்:—எப்பொழுது பார்த்தாய்?
கைதி:—எப்பொழுதும் பார்த்திருக்கிறேன்!
ஜட்ஜ் (கோபத்துடன்):—இவனைக் கைது செய்யுங்கள்!

கைதி:—விடுதலை எப்பொழுது?
ஜட்ஜ்:—என்றைக்காவது!

# பொன்னி

எஸ்.வி.எஸ்

சூரியன் கிழக்கில் உதித்ததும், அழகேசனுக்கு மூக்கின் மேல் கோபம் உதித்தது! ஆமாம், கையில் காலணா இல்லாதபோது சூரியன் உதித்தால் கோபம் வராமல் என்ன செய்யும்?

இருந்தாலும் தன் சட்டைப் பையை ஒருமுறை பார்த்தான். அதிலிருந்த கைக்குட்டையை ஒரு தரத்துக்குப் பத்து தரம் உதறிப் பார்த்தான்; தலையைச் சொறிந்து பார்த்தான்; காலணாகூடக் கிடைக்கவில்லை அழகேசனுக்கு.

"ஒருவேளை நம்முடைய கஜானாவில் ஏதாகிலும் இருக்குமோ? பார்க்க மறந்து விட்டோமே!" என்று எண்ணிக் கொண்டே காதைத் தடவிப் பார்த்தான். என்ன ஆச்சரியம்! கஜானாவில் நாலணா இருந்தது!

"இந்த வேளைக்கு ஆச்சு!" என்று அந்த நாலணாவுடன் திருப்தியடையாத அழகேசன், அடுத்த வேளையைப் பற்றிச் சிந்திக்க ஆரம்பித்தான்.

கடைசியில், ஒரு யோசனை அர்த்த ராத்திரியில் புறப்படும் அர்த்த சந்திரனைப் போல் தோன்றியது.

"மாமா மங்களசேகர முதலியார் இருக்கும்போது நமக்கென்ன கவலை!" என்று எண்ணிக் கொண்டான்.

உடனே கோடம்பாக்கத்திலிருந்த அழகேசன், தன்னிடமிருந்த நாலணாவில் அலட்சியமாக ஓரணாவை வீசி எறிந்து, சைதாப்பேட்டைக்கு ஒரு டிக்கெட் வாங்கிக்கொண்டான். மிச்சம் மூன்றணாவைப் பையில் போட்டுக்கொண்டு மாமாவின் வீட்டை அடைந்தான்.

"எதற்கு வந்தாய்?" என்று வாயில் ஐஸ் கட்டியைப் போட்டுக் கொண்டவர் போல் கேட்டார் மாமா.

அந்தக் குளிர்ச்சியில் உடலும் உள்ளமும் பூரித்து விம்மிப் போய், "இந்த மாதச் செலவுக்கு நாற்பது ரூபாய் வேண்டும்......" என்று அழகேசன் ஆரம்பித்தானோ இல்லையோ, மாமா காட்டு ராஜா போல் பேச ஆரம்பித்தார். "ரூபாய்க்கா வந்தாய்? உனக்குக் கொடுப்பதை என் பொன்னிக்குக் கொடுத்தால் புண்ணியமுண்டு; நன்றியுண்டு. நீ நன்றி கெட்டவன். உனக்கு எதற்குக் கொடுக்கிறது?" என்றார்.

அழகேசனுக்குத் துக்கம் தொண்டையை அடைத்துக் கொண்டது. "மாமா! என்னை ரொம்ப ரொம்ப அவமானப் படுத்திப்பிட்டீங்க!" என்று சொல்லி விட்டு வெளியே வந்தான். அப்போது அழகேசனுக்கு வயிறு பசித்தது!

பத்தடி தூரத்தில் ஒரு கிழவி வேர்க் கடலை கூறு கட்டி விற்றுக்கொண்டிருந்தாள். "இந்த மூன்றணாவை இனி முந்நூறணா ஆக்க வேண்டும். அதைத் தவிர வேறு வழியில்லை. ஆனாலும் இதில் காலணா செலவழித்துக் கடலை வாங்குவதினால் ஒன்றும் குடி முழுகிப் போய் விடாது!" என்று கடலையை வாங்கித் தன் கைக்குட்டையில் கட்டிக் கொண்டான். வழி நெடுக ஒவ்வொன்றாகத் தின்றுகொண்டே நடந்தான்.

கொஞ்ச தூரம் சென்றானோ இல்லையோ, ஒரு பிராணி அவனைத் தொடர்ந்து ஓடி வந்தது. என்ன என்று பார்த்தான். நாய் ஒன்று அவன் கடலைக்காக உயிரை விட்டுக்கொண்டிருந்தது!

அழகேசன் ஒரு கடலையை எடுத்து அதற்கு முன்னால் போட்டுவிட்டு யோசிக்க ஆரம்பித்தான். "மாமாவின் இதயத்தில் எனக்கு ஒருவனுக்கே இடம் இருக்க வேண்டியிருக்க, ஒரு பொன்னி முழு இடத்தையும் பிடித்துக்கொண்டு விட்டாளே!" என்று எண்ணியவாறு சாலையோரத்தில், இருந்த ஒரு புளிய மரத்தடியில் போய் உட்கார்ந்தான்.

சிறிது நேரத்துக்கு முன் தோழமை பூண்ட நாய் அவன் கடைக் கண் நோக்குக்கும் கடலைக் கொட்டைக்கும் ஏங்கி நின்றது. "நீதான் என் ஆருயிர்!" என்று சொல்லித் தன் கைக்குட்டையிலிருந்த ஐந்தாறு கடலைக் கொட்டைகளையும் அன்புக்கு அடையாளமாக விட்டெறிந்துவிட்டுக் கைக்குட்டையையும் ஆகாசத்தில் பறக்கவிட்டான். கடலையைப் பொறுக்கித் தின்ற நாயைப் பார்த்த அழகேசனுக்கு அதைத் தட்டிக் கொடுக்க வேண்டும், கட்டிக்கொள்ள வேண்டும் போன்ற உணர்ச்சி உண்டாயிற்று. அதைத் தழுவிக் கொண்டான்..

அதன் கழுத்துப் பட்டையுடன் கட்டியிருந்த பழைய அரையணு அகலத் தகடு கைக்குத் தட்டுப்பட்டது. அதில் ஏதோ எழுதியிருந்தது. என்ன என்று பார்த்தான். மூன்றே எழுத்துக்கள் அவனை மூர்ச்சை போட்டு விழச் செய்தன!

அந்த மூன்று எழுத்து என்ன என்கிறீர்கள்?—**பொன்னி**தான்!

சுய நினைவு வந்து முழித்துப் பார்த்த போது, நாய் கடைசி வேர்க்கடலையைத் தன் வாய்க்குக் கொண்டு வரும் முயற்சியில் ஈடுபட்டிருந்தது. கொஞ்சம் கூடத் தயை தாட்சண்யம் பாராமல் 'பளார்' என்று அதன் கன்னத்தில் ஒரு அறை விட்டான். நாய் வாலைக் குழைத்துக்கொண்டு ஓடிற்று! அழகேசனும் "சனியனே!" என்று வைதுகொண்டே தான் வந்த வழியைப் பார்த்து நடக்க ஆரம்பித்தான்.

அப்போது மாமாவின் வீட்டு வாசலில் ஒரு பதினாறு, பதினேழு வயதுப் பெண் நின்று கொண்டிருந்தாள்!

அவளைப் பார்த்தும் பார்க்காததுபோல் ஒரு பெருமூச்சு விட்டுவிட்டு மேலே பத்தடி நடந்திருப்பான். அப்போது வெண்கல நாதம்போலும் ஜலதரங்கம் போலும் தவுல் வாத்தியம் போலுமிருந்த ஒரு குரல் ரொம்பவும் தித்தித்துக் கொண்டு அவன் காதில் பாய்ந்தது! "யாரைக் கூப்பிடுகிறான்?" என்று கவனித்தான். "ஜூ ஜூ, இங்கே வா!" என்று குரல் வந்தது.

சங்கீத ரஸிகர்கள் நல்ல கச்சேரியில் 'வன்னான் வந்தானே' என்ற பாட்டைக் கேட்டுச் சந்தோஷப்படுவதைப் போல் அழகேசன் 'ஜூ ஜூ' என்ற நாதத்தைக் கேட்டுச் சந்தோஷப்பட்டான்!

ஆனால் அவள் அப்படிக் கூப்பிட்டது பொன்னியைத்தான். பொன்னி வாயில் ஒரு கைக்குட்டையுடன் அழகேசனைப் பார்த்து ஓடி வந்து கொண்டிருந்தது.

அழகேசன் அப்போதுதான் தன் சட்டைப் பையைப் பார்த்தான். கைக் குட்டை யில்லை. வேர்க்கடலை சாப்பிட்டுவிட்டு அந்த மரத்தடியிலேயே போட்டுவிட்டு வந்தது ஞாபகம் வந்தது. "சபாஷ்! நன்றியுள்ள பொன்னி!" என்று அதைத் தட்டிக் கொடுத்தான்.

அதற்குள் "ஜூ ஜூ, இங்கே வா!" என்று இன்னொரு தடவை அந்தத் தீங்குரல் வந்ததும், நாயைப் போகவிட்டான்!

அழகேசனுடைய நல்ல காலமோ கெட்ட காலமோ, அதி வேகமாக அந்த நாரீகுல திலகத்திடம் போய்க் கொண்டிருந்த நாயை, "பொன்னி, ஜூ ஜூ!" என்று கூப்பிட்டு வைத்தான்!

அவ்வளவுதான்; இழக்கிலும் மேற்கிலும் இடுஇடு என்று இடித்தது! நாரீகுல திலகம் வீட்டிற்குள் நுழைந்தாள். அடுத்த நிமிஷம் ஓரே கோப வெறியில் வெளியே தோன்றினார் மாமா!

கொஞ்ச தூரத்தில் அழகேசன் நின்று கொண்டிருந்ததைப் பார்த்ததும் மாமாவின் கோபம் அதிகமாகிவிட்டது.

மாமாவைப் பார்த்த மருமகன் நடுநடுங்கிப் போய்விட்டான். "என்ன விபரீதமோ, ஏதோ!" என்று எண்ணி எண்ணி ஆவி குலைவுற்றான்.

மாமா கம்பீரமான குரலில், "அழகேசா, இங்கே வா!" என்றார்.

அழகேசன் பயபக்தியுடன் போனான். "யாரைப் 'பொன்னி' என்று கூப்பிட்டாய்?" என்று கேட்டார்.

"ஏன், நாயைத்தான்!"

"என்ன? நாயையா 'பொன்னி' என்று கூப்பிட்டாய்? உனக்கு என்ன அவ்வளவு துணிச்சல்?—ஒன்றும் தெரியவில்லையோ?" என்று பலமாகக் கத்தினார்.

"நன்றாகத் தெரிந்துதான் மாமா 'பொன்னி' என்று கூப்பிட்டேன்!"

"சரி, உனக்கு இது வல்ல வழி! வைக்கிறேன் பார் — உன்னை வைக்கிற இடத்தில்!" என்று சொல்லி விட்டு வேகமாக வெளியே போனார்.

அழகேசனுக்கு வெளியே போவதா, இருப்பதா என்று ஒன்றும் புரியவில்லை. அப்



போது நாய் அவனிடம் வாலை ஆட்டிக் கொண்டே வந்தது.

அழகேசன் மீண்டும் அந்த நாயைப் பார்த்து. "பொன்னி!—உன்னை நான் 'பொன்னி' என்று கூடக் கூப்பிடக் கூடாதாம்!" என்றான்.

கதவிடுக்கிலிருந்து," என்னுங்க, நாயைப் போய் நீங்க 'பொன்னி' என்கிறீங்களே?" என்று கேட்டாள் அந்தப் பெண்.

"பின்னே, என்னன்னு சொல்லிக் கூப்பிடுகிறது?"

"நாய் பேரு டைகரு!"

"என்ன, நாய் பேரு டைகரா? 'பொன்னி' இல்லையா?"

"இல்லேங்க!"

"பின்னே, 'பொன்னி' என்கிறது யார் பேரு?"

"சொல்ல ரொம்ப வெட்கமாயிருக்குதுங்க — என் பேருதான் பொன்னி!"



"உன் பெயரா பொன்னி! அப்படியானால் என்னை மன்னிச்சுடுவாயா?" என்று வெண்ணெயும் உருகும்படிக் கேட்டுக் கொண்டான் அழகேசன்.

இப்படி அவன் மன்றாடிக் கொண்டிருந்ததை அப்போதுதான் உள்ளே நுழைந்த மாமா பார்த்தார். அவர் கூடவே அழைத்து வந்த சிவப்புத் தலைப் பாகைக்காரரும் பார்த்தார். இரண்டு பேரும் மூக்கின் மேல் விரலை வைத்தார்கள். அந்த விரல் அப்படியே மூக்கோடு ஒட்டிக்கொள்ளும்படி, "மாமா, அவங்க ரொம்ப நல்லவங்க! அவங்களை ஒன்னும் பண்ணாதிங்க!" என்று பொன்னி அழாக்குறையாக அழுதாள்!

அழகேசன், "இதோ பாருங்க மாமா! இதனால் தான் நான் அப்படிக் கூப்பிட்டேன்!" என்று சொல்லி, நாயின் கழுத்துப் பட்டையிலிருந்த தகட்டைக் காண்பித்தான். எல்லாருக்கும் ஆச்சரியமாக இருந்தது!

* * *

அன்றிலிருந்து அழகேசனும் மாமாவின் அன்புக்குப் பாத்திரமானான்; கொஞ்ச நாளில் பொன்னியின் ஆருயிர்க் கணவனும் ஆனான். அழகேசனுக்கு டைகரின் கழுத்தில் 'பொன்னி' என்று எழுதித் தொங்க விட்டது யார் என்று அறிவதற்கு ஆசை. ஒரு நாள் பொன்னியே அது விஷயமாக அவனிடம் பிரஸ்தாபித்தாள்.

"எதிர் வீட்டில் ஒரு அண்ணாத்தை இல்லே, அவங்க நான் கருப்பாக இருக்கிறேன் என்று என்னை 'டைகர்' என்றும், 'டைக'ரைப் 'பொன்னி' என்றும் கூப்பிடுவாங்க! அதைக் கேட்ட அவங்க வீட்டு பொல்லாத வேலைக்காரன் நம்ம நாய் கழுத்திலே அந்தத் தகட்டைக் கட்டி வைச்சான்!" என்றாள்.

"அவன் மற்றப் பேர் விஷயத்தில் பொல்லாதவனாயிருந்தாலும் நம்ம விஷயத்தில் ரொம்ப நல்லவன்! இல்லையென்றால் உன் பக்கத்தில் இப்போது நான் உட்கார்ந்திருக்க முடியுமா?" என்றான் அழகேசன் சிரித்துக்கொண்டே.

---



★

## பார்வைக்கு மட்டும்!

சாப்பிடுபவர்:—என்ன சாம்பார்?

வர்வர் (ஒரே ஒரு முருங்கைக்காய்த் துண்டை எடுத்துக் காட்டி):—முருங்கைக் காய் சாம்பார்!

சாப்பிடுபவர்:—சரி; கொஞ்சம் தான் போடு!

வர்வர்:—உங்களைப்போல் மற்றவர்கள் சந்தேகப்பட்டுக் கேட்டால், காட்டுவதற்கு ஒன்றாவது வேண்டாமா?

★



# கம்பர் தரும் காட்சி

டி.கே.சி

## 154. பகைவருக்குப் பாராட்டு!

★ ★ ★

"உன்னை இப்படி அங்க ஹீனம் செய்தவர்கள் யார்?" என்று சூர்ப்பனகையைப் பார்த்து ராவணன் கேட்டான். 'மானிடர்கள் தான் அப்படிச் செய்தார்கள்' என்று அவள் சொன்னாள். ராவணனுக்கு நம்ப முடியவில்லை. "நீ ஏதோ இல்லாத காரியத்தைச் சொல்லிக் கொண்டிருக்கிறாய்! இந்தப் பொய் எல்லாம் வேண்டாம். ஏதோ பயம் உன்னை இப்படிச் சொல்லச் செய்கிறது. பயத்தை விட்டொழி! உண்மையைச் சொல்!" என்று சொன்னான் ராவணன்.

சூர்ப்பனகை பதில் சொல்ல ஆரம்பித்தாள்:

"முனிவர்கள் ராமனிடம் போய் முறையிட்டார்கள்: 'ஏதோ எங்கள் புலன்கள் அமைதி பெற்று விட்டன என்று எண்ணி இருந்தோம். அப்படி அமைதி ஒன்றும் பெற்று விடவில்லை. அரக்கர்களை நினைத்தாலே எங்கள் ஐம்புலன்களும் அஞ்சுகின்றன!'—இப்படி முறையிட்டதைக் கேட்ட ராமன், 'நீங்கள் கவலைப்பட வேண்டாம். எல்லா உலகங்களையும் வெல்ல என்னிடம் சக்தி இருக்கிறது. மேலும், அரக்கர் குலத்தை வேரோடு தீர்த்து விடுகிறேன்' என்று உறுதியும் கொடுத்திருக்கிறான்."

'ஆறு புலன் அஞ்சி னா
அரக்க ரை'எனச்,சென்(று)
ஏறு நெறி அந்த ணர்
இயம்ப, 'உல(கு)எல் லாம்
வேறும் என, நுங்கள் குலம்
வேரொ டும்அ டங் கக்
கோறும் என முந்தை ஒரு
சூள்உ றவு கொண் டார்.'

[ஆறுபுலன் அஞ்சின அரக்கரை: அமைதி பெற்ற புலன்கள் யாருக்கும் அஞ்ச வேண்டாம். ஆனாலும் அரக்கரை எண்ணிய மாத்திரத்தில் அஞ்சுகின்றன; சென்று ஏறும் நெறி அந்தணர் இயம்ப: யோக மார்க்கத்தில் மேலே மேலே போய்க் கொண்டிருக்கும் உயர்ந்த நிலையிலுள்ள முனிவர்கள் முறையிட, அந்த ராமலக்ஷ்மணர்கள் உறுதி சொன்னார்கள்; உலகு எல்லாம் வேறும் என:

மறைந்த



உலகத்தை வெல்லாம் அரக்கரை விட்டு வீட்டுவோம் என்றும்; உங்கள் குலம்: உன்னுடைய அரக்க குலம்; வேரோடும் அடங்கக் கோறும் என: வேரோடு அழியும்படி கொன்று விடுவோம் என்றும்: முந்தையோரு சூள் உறவு கொண்டார்: முன்னமேயே ஒரு சபதம் செய்திருக்கிறார்கள். (வேறும்: வெல்லுவோம்: கோறும்: கொல்லுவோம்.)]

ராம லக்ஷ்மணர்களுக்கும் முனிவர்களுக்கும் உள்ள இந்தச் சம்பந்தத்தைச் சொன்னாள். ராவணனும் அரக்கர்களும் அவர்களுக்குத் தீராப் பகையாளிகள் என்றும் சொல்லி விட்டாள். இதோடு நிற்கிறதா வார்த்தை? உள்ளத்திலுள்ள காதல் தூண்ட, ராம லக்ஷ்மணர்களைப் பற்றி அபாரமாய்ப் பாராட்ட ஆரம்பிக்கிறாள்.

"ஒரே உலகத்தில் இரண்டு மன்மதர்கள் வாழ்ந்து கொண்டிருக்க நீ பார்த்திருக்கிறாயா?" என்று ராவணனைப் பார்த்து ஆரம்பிக்கிறாள்.

'மாரர் உள ரேஇ ருவர்
ஒரு லகின் வாழ் வார்;

வீரர் உள ரேஅ வரின்
வில்அ தனின் வல் லார்;

ஆர்ஒ ருவர் அன்ன வரை
ஒப்ப வர்கள், ஐ யா!

ஓர்ஒ ருவ ரேஇ றைவர்
மூவ ரையும் ஒப் பார்.'

[வீரர் உளரே அவரின்: அவரைப் போல வீரர் உளரோ; வில்லதனின் வல்லார்: வில் வித்தையில் வல்லவர்கள்.]

குறிப்பு:—ஆச்சரிய பாவத்தை இசைமயமாய் வடித்திருக்கிறது இச் செய்யுளில்.

மேலும் சொல்லுகிறாள்: "சக்கரவர்த்தியாகிய தசரதனது மைந்தர்கள். அவர்களைப் பற்றி ஒரு குற்றமும் சொல்ல முடியாது. தந்தை சொற்படி இந்த வனத்தில் வசித்து வருகிறார்கள்."

'தரா வலய நேமி உழ—
வந்த யர தப் பேர்
பராவ ரும்ந லத்தொ ருவன்
மைந்தர்; பழி யில் லார்;
விராவ ரும்வ னத்(து)அ வன்
விளம்ப உறை கின் றார்;
இராம னும்இ லக்கு வனும்
என்பர் பெயர்' என் றாள்.

[தராவலய நேமி உழவன்: இந்த பூமியாகிய வட்டத்தைச் சக்கரம் கொண்டு உழுதிறவன், சக்கரவர்த்தி; தயரதப் பேர் பராவரும் நலத்து ஒருவன்: தசரதன் என்னும் பெயரோடு யாவராலும் புகழப்பட்டு வரும் உயர்ந்த குணத்தவனது; மைந்தர்: பிள்ளைகள்; பழி இல்லார்: அவர்களிடத்திலே யாதொரு குற்றமும் சொல்ல முடியாது; விராவரும் வனத்து: இந்த நெருங்கிய காட்டில்; அவன் விளம்ப உறைகின்றார்: தந்தையாகிய தசரதன் கட்டளையிட்ட காரணமாக வசிக்கிறார்கள்.]

அங்க ஹீனம் செய்த மனிதர்களை இப்படிப் புகழ்ந்து பாராட்டிப் பேசுவது உண்டா என்று கேட்கலாம். ஆளுல் காதல் தத்துவம் இதுவும் செய்யும் இதற்கு மேலும் செய்யும் என்றுதான் சொல்லவேண்டும். இந்த அபூர்வமான உண்மையைக் கம்பர் கண்டார், அழகாய் இதிகாசத்தில் அமைத்தார்.

## மாயம்!






# Firestone

## பயர்ஸ்டோன்

டயர்களில் கம்-டிப்பிடு இது ஒன்றுதான்



# யசோதரா


ஆசிரியர் : விச்வம்பரநாத் கௌசிக்

மொழிபெயர்ப்பு : ரா. வீழிநாதன்


## 14

யசோதரா, வருத்தத்துடன் இப்படி விசிப்பதைக் கண்ட சந்தாமின் உள்ளமும் நெகிழ்ந்து விட்டது. அவன் மிகவும் தழதழத்த குரலில், "ஜஸ்ஸோ, உனக்காக நான் எத்தனை கஷ்டப்பட்டேன், தெரியுமா? உன்னைச் சுகமாக வைத்துக் கொள்ள வேண்டுமென்ற எண்ணத்தில் செய்யத்தகாத காரியங்களை எல்லாம் செய்தேன். உனக்காக—உன்னிடமுள்ள பாசத்தின் காரணமாகத்தான் இன்னும் நான் இந்த உயிரை வைத்துக் கொண்டிருக்கிறேன். நீ மட்டும் பிறக்காமல் இருந்திருந்தால் உன் அம்மா செத்தபொழுதே நானும் என் உயிரை விட்டிருப்பேன். ஜஸ்ஸோ, நீ இப்படி துக்கப்படுவதை என்னால் சகிக்க முடியவில்லை. நீயோ சொல்லமாட்டேன் என்கிறாய்! உன் அம்மாவின் ஞாபகம் வரும்பொழுதெல்லாம் உன்னைப் பார்த்து நான் என் மனதைத் தேற்றிக் கொள்கிறேன். நீ சந்தோஷமாயிருந்தால்தானே அம்மா! என் மனது என்ன பாடு படுகிறது, தெரியுமா? உன்னுடைய வருத்தத்தின் காரணத்தைச் சொல்லம்மா! என்னிடம் கூடவா இதை யெல்லாம் நீ மறைக்க வேண்டும்? என்னால் முடிந்தமட்டில் உன் வருத்தத்தைப் போக்குகிறேன். அம்மா, மனதிலிருப்பதை மறைக்காமல் என்னிடம் சொல்லு. நீ சொல்லாமல் இப்படி வருத்தப்பட்டால் என் மனதுக்கு ரொம்பக் கஷ்டமாயிருக்கிறது" என்று சொன்னான்.

தந்தையின் இந்த அன்பு நிறைந்த வார்த்தைகளைக் கேட்ட யசோதராவுக்குத் தன் உள்ளத்திலுள்ள சகல விஷயங்களையும் மறைக்காமல் கூறிவிட்டால் என்ன என்ற எண்ணம் உதித்தது. ஆனால் எவ்வளவோ முயன்றும் அவளால் வாய் திறந்து ஒரு வார்த்தையாவது சொல்ல முடியவில்லை. பெண்களுக்கு இயற்கையாக உள்ள வெட்கம் அவளை வாய் திறந்து பேச விடவில்லை. நந்தாம் மிகவும் பிடிவாதம் பிடித்துக் கேட்டதும், "ஒன்றுமில்லை அப்பா, பழைய ஞாபகங்களும் அம்மாவின் நினைவும் வந்துவிட்டது. அதனால்தான் மனது இப்படியிருக்கிறது!" என்று அவள் ஏதோ சொல்லி வைத்தாள்.

"அடி அசடே, பழைய விஷயங்களை நினைத்துக் கொள்வானேன்?" என்றான் நந்தாம்.

யசோதரா கண்களைத் துடைத்துக் கொண்டு, "எத்தனை மணிக்குப் புறப்பட வேண்டும், அப்பா?" என்று கேட்டாள்.

"ஒன்பது மணி வண்டிக்கு, எட்டு மணிக்கே இங்கிருந்து புறப்பட்டாக வேண்டும். காலையில் எழுந்திருக்கணுமோ இல்லையோ? ராத்திரி ரொம்ப நேரம் கண் விழிப்பது சாத்தியமில்லை" என்று கூறி நந்தாம் விரைவாகத் துணிமணிகளைக் கட்ட ஆரம்பித்தான். யசோதராவும் அவனுக்கு உதவி செய்யலானாள்.

அரை மணி நேரத்திற்குப் பிறகு யசோதரா உள்ளே போகப் புறப்பட்டாள். வழியில்தான் ராமநாத பாபுவின் அறை இருந்தது. அவருடைய அறையின் அருகே வரும்பொழுது அவளது நடையின் வேகம் குறைந்தது. ஜன்னல் வழியாக எட்டிப் பார்த்தாள். உள்ளே விளக்கு எரிந்து கொண்டிருந்தது. ராமநாத பாபு ஒரு நாற்காலியில் உட்கார்ந்து அண்ணாந்து பார்த்த வண்ணம் ஏதோ யோசனையில் ஆழ்ந்திருந்தார். அவரைப் பார்த்த வண்ணம் யசோதரா சிறிது நேரம் நின்றாள். அவளது இதயம் படபடத்தது. உள்ளத்தில் பழைய நினைவுகள் மறுபடியும் எழுந்து வருத்தத்தைக் கிளறிவிட்டன.

ராமநாத பாபு திடீரென எழுந்து அறையினுள்ளேயே உலாவலானார். உலாவியவாறே ஒரு தடவை கடிகாரத்தைப் பார்த்தார். ஒன்பது மணி அடிப்பதற்கு ஐந்து நிமிஷம் பாக்கியிருந்தது. "இன்னும் பதினொரு மணிதான் பாக்கி!" என்று அவரது வாய் முணுமுணுத்தது.

ராமநாத பாபுவின் இந்த நிலையைப் பார்த்தும், அவரது வாயிலிருந்து வந்த வாக்கியத்தைக் கேட்டும் யசோதராவின் உள்ளக் கிடக்கையிலிருந்து, "ஆ!" என்ற பெருமூச்சு சிறிது வேகமாகவே எழுந்தது. கண்களிலும் கண்ணீர் துளிர்த்து நின்றது. அவள் ஜன்னலை ஒட்டி நின்று கொண்டாள்.

ராமநாத பாபு அவளது பெருமூச்சின் சப்தத்தைக் கேட்டு ஜன்னலண்டை வந்து எட்டிப் பார்த்தார். இருட்டில் ஒரு மனித உருவம் நிற்பது தென்பட்டது. "யார் அது?" என்று கேட்டார். உடனே யசோதரா அங்கிருந்து நழுவ ஆரம்பித்தாள். அதைக் கண்ட ராமநாத பாபு அறைக் கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்தவாறு, "யார் அது, பேசாமல் போகிறது?" என்று கேட்டார்.

யசோதரா இன்னும் வேகமாக நடக்க ஆரம்பித்தாள். ராமநாத பாபு வேகமாக ஓடி வழிமறித்து, "யார் அது? எங்கே போகிறாய்?" என்று அதட்டிக் கேட்டார்.

"நான்தான்!" என்று யசோதரா மிகவும் மெதுவான குரலில் பதில் அளித்தாள்.

"யார்? ஜஸ்லோவா? இத்தனை நேரம் கழித்து எங்கே போகிறாய்?"

"அப்பாவின் அறைக்கு மூட்டை முடிச்சு கட்டி வைப்பதற்காகப் போயிருந்தேன்; இப்போது திரும்பிப் போகிறேன்!"

"அப்படியா?" என்று கேட்ட ராமநாத பாபு சிறிது நேரம் கழித்து, "நாளைக்கு நீ ஊருக்குப் போய் விடுவாய். இன்றுதான் உன்னைக் கடைசித் தடவையாகப் பார்க்கிறேன். இனிமேல் எப்பொழுது பார்க்கப் போகிறோமோ, கடவுளுக்குத்தான் தெரியும்!" என்றார். அதற்குமேல் பேச அவருக்கு நா எழவில்லை.

யசோதரா சுவரில் சாய்ந்ததைப் பார்த்தால் மூர்ச்சையுற்றுக் கீழே விழுந்து விடுவாள் போல் தோன்றியது. இதைக் கண்ட ராமநாத பாபு அவளைத் தன் கைகளில் ஏந்திக்கொண்டு, "உனக்கு உடம்பு சரியாயில்லையா, என்ன! வா, என் அறையில் சற்று நேரம் வந்து உட்காரு. சற்று ஆசுவாசப் படுத்திக்கொண்டு போகலாம்" என்றார்.

யசோதரா சற்றுத் தெளிந்து பயத்துடன், "அதெல்லாம் வேண்டாம்; எனக்கு உடம்புக்கு ஒன்றுமில்லை" என்று கூறித் தன்னை விடுவித்துக்கொள்ள முயன்றாள்.

"இப்படியிருக்கும் பொழுது நீ தனியாய்ப் போகக் கூடாது. சற்றுக் கழித்துப் போகலாம், வா!"

"இல்லை; நான் போய் விடுகிறேன். விட்டு விடுங்கள்; எனக்கு ஒன்றுமில்லை."

"ஜஸ்லோ, என்னிடம் பயப்படுகிறாயா, அல்லது உனக்கு என்மீது நம்பிக்கைதான் இல்லையா? என்மீது நம்பிக்கை இல்லையென்றால் உன்னிடம் நான் பிடிவாதம் பிடிக்கத் தயாராயில்லை. உன்னிடம் பிடிவாதம் பிடிக்க நான் யார்? — சரி, போய் வா! இந்த ஆயுளிலே இனி நாம் பார்க்கிறோமோ இல்லையோ?" என்று கூறியவாறு தனது அறைப் பக்கம் போனார் ராமநாத பாபு.

அவர் புறப்படுவதைக் கண்ட யசோதரா, ஒரு வேளை அவர் கோபித்துக் கொண்டாரோ என்று அஞ்சி அவர் பக்கம் திரும்பி "என்னிடம் உங்களுக்குக் கோபமா?" என்று கேட்டாள்.

"உன்னிடம் எனக்கு என்ன கோபம்? ஆனால் உனக்கு என்மீது நம்பிக்கையில்லையே என்று நினைக்கும்பொழுது மனதுக்கு ஒரு புறம் வருத்தமாய்த்தானிருக்கிறது. தனியாக இருக்கும் உன்னிடம் நான் தப்பாக நடந்து கொள்வேன்

என்று நினைக்கிறாயே! இன்னும் நீ என்னைத் தெரிந்துகொள்ளவில்லையே என்றுதான் வருத்தமாயிருக்கிறது" என்றார் ராமநாதபாபு.

"இல்லை; நீங்கள் அப்படி எண்ணுவது தான் தப்பு. உங்கள்மீது எனக்குப் பூரண நம்பிக்கையிருக்கிறது. ஆனால், வேறு யாராவது பார்த்துவிட்டால்......"

"இப்பொழுது யார் வரப்போகிறார்கள்?"

"சம்பா வந்துவிட்டால்?"

"அதெல்லாம் வரமாட்டாள். இரண்டே இரண்டு வார்த்தைகள்—உடனே நீ போய் விடலாம்."

"அப்படியானால் சரி!"

ராமநாத பாபுவின் பின்னாலேயே யசோதாரா சென்றாள். அறையினுள் சென்றதும் ராமநாத பாபு கதவைச் சாத்தித் தாளிட்டு விட்டு ஒரு நாற்காலியில் உட்கார்ந்து கொண்டார். யசோதாரா அவருக்கு எதிரிலேயே நின்றாள். சிறிது நேரத்திற்கெல்லாம் தலை நிமிர்ந்த ராமநாதபாபுவின் கண்களில் கண்ணீர் துளிர்த்து நின்றது. அவர் வருத்தம் தோய்ந்த குரலில், "ஜஸ்ஸோ, இப்படி நடக்கும் என்று நான் கனவில் கூட நினைக்கவில்லையே! இதற்காகவா நான் உன்னை மனமார விரும்பினேன்? இப்படி என் மனதைக் கொள்ளை கொண்டு போவாய் என்று எனக்கு முன்னமேயே தெரிந்திருந்தால்.........இல்லை; உன்மேல் குற்றமில்லை. செய்ததெல்லாம் நானே தான். நான்தானே நந்தராமை அவளுடைய தாய் தந்தையுடன் சேர்த்து வைத்துவிட வேண்டுமென்று அத்தனை பாடு பட்டேன்! நீ இங்கிருந்து போய்விடுவது இவ்வளவு வருத்தம் தரக்கூடியது என்று அப்பொழுதே எனக்குத் தெரிந்திருந்தால்? —ஜஸ்ஸோ, என் மனம் இதை நினைத்து எப்படிக் கொதிக்கிறது, தெரியுமா? உடலை நெருப்பிலிட்டு வாட்டுவதுபோல் அல்லவா தோன்றுகிறது! நீ போய்விட்டால் எனக்கு இங்கே எப்படி இருப்புக்கொள்ளும்!" என்றார்.

யசோதாரா பேசாமல் நின்றாள். அவளது கண்களிலிருந்து கண்ணீர் பெருகி கன்னத்தை நனைத்துக் கொண்டிருந்தது. ராமநாத பாபு சிறிது நேரம் யசோதாராவையே ஊன்றிப் பார்த்தவாறு நின்று கொண்



டிருந்துவிட்டு, அதே வருத்தத்துடன், “ஜல்ஸோ, என் மனதை என்னவோ செய்கிறது. நீ என் முன் நில்லாதே, போய்விடு! இப்படியே இருந்தால் எனக்கு மூளை கலங்கிவிடும். உன்னை இங்கே அழைத்துக்கொண்டு வந்தேனே, அதுவே பெரிய தப்பு! என் மனம் என் வசத்தில் இல்லை. எனக்குத் தெரியாமலே நான் ஏதாவது செய்தாலும் செய்யலாம். ஆகையால், நீ போ” என்றார்.

யசோதரா தலையை உயர்த்தினாள். அவளுடைய கண்கள் சிவந்திருப்பதையும் கன்னங்கள் கண்ணீரால் நனைந்திருப்பதையும் விளக்கு வெளிச்சத்தில் ராமநாத பாபு பார்த்தார். அன்பும் கருணையும் சேர்ந்து அவரது உள்ளத்தை முற்றுகையிட்டன. அடுத்த நிமிஷம் அவர் வேகமாக எழுந்து யசோதராவின் கையைப் பிடித்துக் கொண்டார். அவளும் உணர்ச்சி மிகுதியினால் அவரது மார்பில் தன் முகத்தைப் புதைத்துக் கொண்டாள். இருவரும் சிறிது நேரம் அவ்வாறே நின்றிருந்தனர்.

யசோதரா, சுய உணர்ச்சி வந்ததும் திடுக்கிட்டவளாய், “என்னை விட்டுவிடுங்கள்! நேரமாய்விட்டது; வருகிறேன்!” என்று பதட்டத்துடன் கூறினாள்.

ராமநாத பாபுவும் வருத்தத்தினால் தழுதழுத்த குரலில், “போகிறாயா! சரி, போய் வா!” என்றார்.

“இந்த வீட்டுக்கு வரும்பொழுதும் பிச்சைக்காரியாகத்தான் வந்தேன். போகும் பொழுதும் அதே பிச்சைக்காரியாகத்தான் போகிறேன்.”

“பிச்சைக்காரியாகவா? ராணியாக அல்லவா போகிறாய்?”

“இல்லை. இங்கே இருந்த வரையில்தான் ராணியாக இருந்தேன். இனி, இங்கிருந்து போனபின் பிச்சைக்காரிதான்!” என்றாள் யசோதரா.

ராமநாத பாபு ஒன்றும் பதில் சொல்லாமல் நாற்காலியில் உட்கார்ந்தார். யசோதரா அவரை நெருங்கி, “ஒரு பிச்சைக்காரப் பெண்ணுக்காக இவ்வளவு வருத்தப்படுகிறீர்களே! என்னைப் போன்ற எத்தனையோ பிச்சைக்காரிகள் உங்கள் வீட்டு வாசலில் பிச்சைக்கு வந்து நிற்கவில்லையா? அவர்களில் ஒருத்தியாக என்னை நினைத்து மறந்துவிடுங்கள். நான் கடைசியாகக் கேட்கும் பிச்சை இதுவே!” என்று கூறிவிட்டு, பொங்கி வரும் கண்ணீரை அடக்க முடியாமல் புடவைத் தலைப்பினால் முகத்தை மறைத்துக்கொண்டு அங்கிருந்து நகர்ந்துவிட்டாள்.

ராமநாத பாபு முன்போலவே உட்கார்ந்திருந்தார். அவருக்கு இரவு பூராவும் தூக்கம் வரவில்லை. அவரது மனத்தில் அநேக வித எண்ணங்கள் எழுந்தன. யசோதராவைப் பிரிந்திருக்க அவருடைய மனம் சம்மதிக்கவில்லை. அவளைத் தன்னுடையவளாக ஆக்கிக்கொள்வதற்கு என்னவெல்லாமோ யுக்திகள் கண்டுபிடிப்பதில் தன் மூளையைச் செலவிட்டுப் பார்த்தார். நந்தராமைப்போல நாமும் யசோதராவை அழைத்துக்கொண்டு எங்காவது ஓடிவிட்டால் என்ன என்றுகூட யோசித்தார். “அவளைப்போல் கஷ்டப்படும்படி யாகிவிட்டால்......?” என்ற கவலை அவருக்குத் துணிவை அளிக்கவில்லை. இரவு பூராவும் அவர் இதே சிந்தனையில் ஈடுபட்டிருந்தார்.

அங்கே, யசோதராவும் இரவு முழுவதும் கண் விழித்தாள். பன்னிரண்டு மணி வரையில் தன் பாட்டியுடன் உட்கார்ந்திருந்தாள். அதற்குப் பிறகு ஒரு மணி வரை சம்பாவதியுடன் பேசிக்கொண்டிருந்தாள். மன வருத்தம் அவளைக் கண்ணை மூடவே விடவில்லை. காலையில் எழுந்து தன்னைப் பிரயாணத்திற்குத் தயார் செய்துகொள்வதில் ஈடுபட்டாள்.

* * *

**வா**சலில் வண்டிகள் வந்து நின்று அவற்றில் சாமான்கள் ஏற்றப்பட்டுக் கொண்டிருந்தன. இதைக் கண்ட ராமநாத பாபுவின் மனத்தில், “ஸ்டேஷன் வரை போவோமா, வேண்டாமா?” என்ற பிரச்னை எழுந்தது. யசோதராவைக் கடைசியாக இன்னுமொரு தடவை பார்க்க வேண்டுமென்ற அவா, “போய்விட்டு வா!” என்று உந்தித் தள்ளியது. “அவள்தான் உன்னை விட்டுப் பிரிந்து போகிறாளே! அவளைப் பார்த்து என்ன செய்யப் போகிறாய்? வீணாக மனதை அலட்டிக் கொள்ளாதே!” என்றது, ஒரு புறத்திலிருந்து வருத்தத்தினால் உண்டான விரக்தி. “சே, அதெல்லாம் நன்றாயிராது. அவள்தான் உன்னைக் காதலிக்கிறாளே, நீ போகாவிட்டால் அவள் வருத்தப்பட மாட்டாளா? நீ போய்விட்டுத்தான் வரவேண்டும்” என்று வற்புறுத்தியது அவருடைய மனம். கடைசியில் தனது தந்தையிடத்தில் அனுமதி பெற்றுப் புறப்படத் தயாரானார் அவர்.

யசோதராவும் நந்தராமும் கண்ணீர் பெருகியவாறு வருத்தத்துடன் எல்லா

ரிடமும் விடை பெற்றுக்கொண்டு வண்டியில் ஏறினர். ஸ்டேஷனை அடைந்ததும் வண்டி வர இன்னும் பதினைந்து நிமிஷம் தானிருக்கிறது என்று தெரிய வந்தது. நந்தராம் 'டிக்கெட்' வாங்கச் சென்றுவிட்டான். ராமநாத பாபு அவர்களை அழைத்துக்கொண்டு பிளாட்பாரத்துக்கு வந்து சேர்ந்தார். எல்லாரும் பெஞ்சியில் உட்கார்ந்தனர். ராமநாத பாபு உலாவியவாறு யசோதாரா அமர்ந்திருந்த பெஞ்சியின் அருகில் வந்து ஒரு முறை அவளைப் பார்த்தார். யசோதரையின் கண்களும் ஒரு முறை அவரைப் பார்த்தன. அவளது முகம் களை யிழந்து காணப்பட்டது.

நந்தராம் டிக்கெட் வாங்கிக்கொண்டு வருவதற்கும் வண்டி வருவதற்கும் சரியாயிருந்தது. எல்லாரும் வண்டியில் ஏறி உட்கார்ந்தனர். நந்தராம் கைகுவித்துக் கொண்டு, "ஐயா, நான் ஏதாவது தப்பிதம் செய்திருந்தாலும் மன்னிக்க வேண்டும். நீங்கள் செய்த நன்றியை என்றைக்கும் மறக்க மாட்டேன். உங்களைப் பிரிவதற்கு எனக்கு வருத்தமாகத்தான் இருக்கிறது. இருந்தாலும் எல்லாம் கடவுள் சித்தப்படிதானே நடக்கும்" என்று ராமநாத பாபுவிடம் கூறினான்.

ராமநாத பாபு ஒரு நீண்ட பெருமூச்சுடன், "ஆமாம்; உனக்கு எப்பொழுது இஷ்டமோ அப்பொழுது சங்கோசமில்லாமல் இங்கே வா!—என்ன!" என்றார்.

"என் வீடு போலவேதானே நான் நினைக்கிறேன்!" என்றான் நந்தராம்.

"ராமநாத பாபு, நீங்களும் ஒரு தடவை எங்கள் ஊருக்கு வரவேண்டும்" என்றார் டாகுர்.

"ஆமாம்; நீங்கள் அவசியம் வரவேண்டும், எனக்கு அப்பொழுதுதான் சந்தோஷமாயிருக்கும்" என்றான் நந்தராம்.

"அவசியம் ஒரு தடவை வருகிறேன்."

"வருவதற்கு முன்னால் கடிதம் எழுதுங்கள். ஸ்டேஷனுக்கு வண்டி அனுப்புவதற்குச் சௌகரியமாயிருக்கும்" என்று நந்தராம் கூறிக்கொண்டிருக்கும் பொழுதே, 'கார்டு' ஊதலை ஊதினான். நந்தராம் ராமநாத பாபுவின் கால்களைத் தொட்டு வணங்கப் போனான். ராமநாத பாபு, "நந்து, இதெல்லாம் நன்றாயில்லை. போய் வண்டியில் உட்காரு!" என்றார்.

"நீங்கள் என் எசமானர் அல்லவா?" என்று கேட்டவாறு வண்டியில் ஏறி உட்கார்ந்தான் நந்தராம். வண்டியும் ஊதிவிட்டு மெதுவாக நகர ஆரம்பித்தது.

ராமநாத பாபுவின் கண்கள் வண்டியில் இருந்த யசோதாராவை நோக்கின. அதே சமயம் யசோதாராவின் கண்களும் ராமநாத பாபுவை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தன. அவளது கண்களில் கண்ணீர் மல்கியிருந்தது. அதைக் கண்ட ராமநாதபாபுவின் கண்களிலும் அவரை யறியாமலே கண்ணீர் சுரந்தது.

அந்த ரயில் வண்டி, தன்னுடைய உடைமைகள் அனைத்தையும் அபகரித்துக் கொண்டு போவதைப் போன்ற உணர்ச்சியில் ராமநாத பாபு பெருமூச்சு விட்டார். பிறகு கைக்குட்டையினால் கண்களை மூடிக்கொண்டார்.

யசோதாராவுக்கோ தன் உயிர் அங்கேயே தங்கிவிட்டது போலவும், உயிர் அற்ற உடல் மட்டும்தான் வண்டியுடன் வருவதுபோலவும் தோன்றியது. அவள் வண்டியின் ஜன்னலில் தன் தலையைச் சாய்த்துக் கொண்டாள். அவளது கண்களிலிருந்து கண்ணீர் பெருகி வண்டியின் வெளிப் புறத்தில் வழிந்தது.

(தொடரும்)

---

# ரொம்பப் பிடித்தது!



ஒருவர்:—என்ன, உங்களுக்குப் புழுங்கலரிசி சாப்பிட்டுத்தானே பழக்கம்? இப்பொழுது போடுகிற பச்சரிசி உங்களுக்குப் பிடிக்கிறதா?

நண்பர்:—ரொம்ப நன்றாய்ப் பிடிக்கிறது! முதலில் கையில் பிடித்துக் கொள்ளுகிறது: பின் வாயில் பிடிக்கிறது: கடைசியில் வயிற்றுக்குள்ளே போய் நன்றாய்ப் பிடித்துக் கொள்ளுகிறது!

—பி. எஸ். ரங்கநாயகி.

# சந்திரக் கிரகணம்

எஸ். விஜயராகவன்

அன்று ஆபிஸிலிருந்து அவசர அவசரமாக வீட்டை நோக்கி வந்து கொண்டிருந்தான் சந்தானம். தெருக் கோடியில் வரும்போதே வாசல் திண்ணையில் நின்றுகொண்டு வரவேற்க ஒரு இள நங்கையும் இல்லை, அவன் வீட்டில். வீட்டிற்குள் நுழைந்த அவன், தன் உடைகளைக் களைந்துவிட்டு எதிரேயிருந்த ஊஞ்சற் பலகையில் உட்கார்ந்தான். கையில் காப்பியைக் கொடுத்துவிட்டுக் கைவளை குலுங்க ஊஞ்சல் சங்கிலியைப் பிடித்துக்கொண்டு அன்று காலை முதல் மாலைவரை வீட்டில் நிகழ்ந்த அதிசயங்களைச் சொல்லவோ, அல்லது சாயங்காலம் எங்கே பொழுது போக்குக்காகச் செல்லலாம் என்று வாது செய்யவோ அங்கு ஒருவருமில்லை.

'இல்லை' என்றால் சந்தானம் பிரம்மச்சாரி அல்ல! அவனுக்கும் விவாகமாகி ஆறு மாதத்திற்கு மேலாகி விட்டது. அவனது அழகிய இளம் மனைவி வஸுமதியும் அவனுடன் மூன்று மாத காலம் குடித்தனம் செய்துவிட்டுத்தான் பிறந்தகம் சென்றிருக்கிறாள். ஆனால் அவள் ஏன் இன்னமும் திரும்பி வரவில்லை? அதுதான் மிகப் பெரிய, அசாதாரணமான விஷயம்!

ஊஞ்சற் பலகையில் உட்கார்ந்திருந்த சந்தானத்தின் ஆழ்ந்த யோசனையைக் கலைக்கும் வண்ணம், "சந்தானம்!" என்று கூப்பிட்டுக் கொண்டே அவனருகில் வந்தாள் அவனது வயது முதிர்ந்த தாயார்.

சந்தானம் மௌனமாயிருந்தான்.

அவன் தாயார் மேலும் தொடர்ந்து, "இங்கே பாரு! நான் சொல்றேன்னு கோவிச்சக்காதே! இன்னும் நவராத்திரிக்குப் பதினைந்து நாள்தான் இருக்கு. ஆத்திலே லட்சுமிகரமாகக் குழந்தை வஸுமதி இல்லாமே என்ன பண்றது? நாளைக்கே போய் அழைத்துக் கொண்டு வா; இல்லாமற் போனால் ஒரு கடிதமாவது போடு!" என்று ஒரே மூச்சில் பேசி நிறுத்தினாள்.

"நீ பேசாமலிருக்கப் போகிறாயா, இல்லையா......?"

இது ஆத்திரத்துடன் கூடிய சந்தானத்தின் குரல்.

"அதென்னமோ அப்பா! எத்தனை நாளைக்குத்தான் அவள் மனசைப் புண்படுத்துவதாக உத்தேசம்? என்னமோ உன் இஷ்டப்படியே, அந்தப் பெண் ராஜத்தையே உனக்குக் கல்யாணம் செய்து வைத்து விடலாமென்றுதான் பார்த்தது; ஆனால் ஜாதகம் சரியாயில்லை, உன் துரதிர்ஷ்டம்! அதற்காக இவள் என்ன செய்வாள்? இனி அழித்துப் பண்ணுகிற காரியமா? ஒன்றுமில்லை. அவள்......ராஜமுந்தான் அப்போது உன்னையே கல்யாணம் பண்ணிப்பேன் என்று துடியாய் நின்றாள்; இப்போது வேறு இடத்தில் கல்யாணம் ஆயிடுத்து. அதனாலே அவள் சந்தோஷமாயில்லையா......?"

"போதும், உன் கதையெல்லாம்! நீ வாயை மூடிக்கொள்ள மாட்டாயா?"

"என்னமோ, நான் செய்த பாவம்! இப்படி என் வயிற்றில் ஜனித்தது தாறுமாறாயிருக்கு!" என்றபடி தன் சுருங்கிய கண்களிலிருந்து பெருக்கெடுத்த கண்ணீரைப் புடவைத் தலைப்பால் மெதுவாகத் துடைத்துக் கொண்டாள் சந்தானத்தின் தாயார்.

வஸுமதி பிறந்தகம் சென்றதிலிருந்து இவ்விதம் மாலை வேளையிலோ அல்லது இரவு நேரத்திலோ சந்தானத்திற்கும் அவனது தாயாருக்கும் வாக்குவாதம் நடப்பது மிகவும் சர்வ சாதாரணமாகி விட்டது. என்றாலும் இன்று வார்த்தைகள் கொஞ்சம் காரசாரமாகப் போய்விடவே சந்தானத்தினால் சகிக்க முடியவில்லை.

மேலே துண்டை உதறிப் போட்டுக்கொண்டு, 'விர்'ரென்று வெளியே நடந்தான். தெருவோடு சென்று கொண்டிருந்த சந்தானத்தின் மனம் ஒரு நிலையில் இல்லை. அவனது மனக்கடலில் எண்ணற்ற எண்ண அலைகள் எழுந்து, மேலும் கீழும் புரண்டு ஒன்றையொன்று அமிழ்த்தி மோதிக் கொண்டிருந்தன. மணல் மிகுந்த வரட்டுப் பாலைவனத்தில் அலைந்து வரும் ஒட்டகம், அதன் நடுவே சிறு ஓடையுடன் கூடிய ஒரு சோலையிருக்காதா என்று தேடியலைவதுபோல், இன்னலால் குமுறும் சந்தானத்தின் மனம் அமைதி தரும் சாந்தியை நாடியதில் ஆச்சரியமில்லை. எனவே, மெதுவாகக் கடற்கரையை அடைந்து, ஜனசஞ்சாரமற்ற ஒரு மூலையில் தன் சவுக்கத்தை விரித்துப் படுத்துக்கொண்டான்.

அப்போது அஸ்தமிக்க ஒரு நாழிகை தானிருந்தது. மாலைக் கதிரவனின் பொன்னொளியால் தங்க மயமாகக் காட்சியளித்த கடல் நீரில் அப்போதைக் கப்போது புரண்டு ஓடி வரும் வெள்ளலைகளும், தூரத்தே அமைதியான நடுக்கடலில் பொன்னாலான படகுகள்போல் மேலே உள்ள சிறு பஞ்சு போன்ற மேகங்களின் பிரதிபலித்த உருவங்களும் பார்ப்போர் மனதிற்குப் பெரும் ஆனந்தம் பயப்பதாக இருந்தன.

தூரத்தே மேற்கில் அடிவானம் வளைந்து கடலின் மேற்பரப்பை முத்தமிடும் காட்சியைக் கண்ட சந்தானத்தின் மனதில் எட்டாத நினைவுகள் ஏற்பட்டன. அவனது மனது பழைய நாட்களைத் தேடிப் பறந்து சென்றது.

* * *

அப்போது சந்தானம் அவனது அத்தை வீட்டிலிருந்து கொண்டு படித்து வந்தான். ராஜம் அவனது அத்தையின் மகள். நல்ல அழகி. இளமை முதல் சேர்ந்து பழகிய இவ்விருவர்களும் ஒருவரை யொருவர் எல்லையற்று நேசித்தனர். ஆனால் சந்தானத்தின் அத்தை சொன்னபடி, தெய்வ சங்கல்பம் வேறு விதமாக இருந்ததுபோலும்! இல்லாவிடில் ஏன் இவ்விருவர்களது ஜாதகங்களும் பொருந்தாமற் போகவேண்டும்?

ராஜத்திற்கும் வேறு இடத்தில் விவாகமாயிற்று. சந்தானமும் வஸுமதி தேவியைக் கைப்பிடித்தான்!

கல்யாணத்தின்போதே சந்தானத்திற்கு இதில் இஷ்டமில்லை. அதற்குக் காரணமாக வஸுமதியிடம் எவ்விதக் குறையையும் காண முடியவில்லை, அவனால். பருவத்தின் சோபை வெள்ளத்தில் மிதந்து கொண்டிருந்த அவள், அழகுக் கோயிலின் அதி தேவதையாக விளங்கினாள். வீணா நாதத்திலுமினிய அவளது கானமோ, நேரே இதயத்தைத் தொடும் இசையமுதம் போன்றது.

இவ்விதம் எல்லா விஷயத்திலும் பொருத்தமான மனைவியைச் சந்தானம் அடைந்தது பற்றி எல்லோருக்கும் சந்தோஷம்.

ஆனால் சந்தானத்தின் மனக்குரங்கு வேறு விதமாக இருந்தது. ராஜத்தை மணந்து கொள்ளும் அவனது இச்சை நிறைவேறாததிலிருந்து அவன் வாழ்வே சூன்யமாகி விட்டதாக எண்ணிக் கொண்டு விட்டான். இருண்ட வாழ்வே எதிர் நோக்கி யிருப்பதாகக் கனவு கண்டான். பாவம்! இருளில் ஒளிவிடச் செய்யும் குலவிளக்காக விளங்கும் வஸுமதியை மேன்மையாக நினைக்கவில்லை, அவனது குறுகிய உள்ளம்!

காலமலரில் ஓரிரு மாத இதழ்கள் உதிர்ந்தன. வஸுமதி புக்ககம் வந்தாள். அன்றலர்ந்த மலரென நினைத்துப் பறந்துவரும் வண்டினம், காய்ந்து கசங்கிய மொட்டுக்களைக் கண்டு சில சமயம் ஏமாற்ற மடைவதுபோல், இளமை வாழ்வின் இன்பத்தை எதிர்நோக்கி வந்த வஸுமதிக்கு வாழ்க்கைப் புயலின் அனுபவம்தான் முதலில் கிடைத்தது!

இதன் அர்த்தம் விளங்காத பேதை வஸுமதியின் நெஞ்சம் எல்லையற்றுப் புழுங்கிற்று. ஒவ்வொரு சமயம் காட்டில் கம்பீரமாகச் சுற்றிவரும் மத்தகஜம், வழியில் ஏமாந்து புற்களால் மூடப்பட்ட பெருங் குழியில் விழுந்து பிளிறுவதைப் போல் வஸுமதியின் பேதை உள்ளம் சோக வெள்ளத்தின் போதையினால் குமுறுவதுண்டு. எனினும் காலம் சென்றால் எல்லாம் தானே சரியாய் விடும் என்ற ஒரே எண்ணத்தில் மன நிம்மதி பெற முயன்றாள்.

இப்படி யிருக்கும்போது திடீரென வஸுமதியின் தாயாருக்கு உடம்பு அசௌகரியம் என்று செய்தி எட்டவே அவளை ஊருக்கு அனுப்பி வைத்தான் சந்தானம். அத்துடனேயே, "இனி நான் அனுப்பச் சொன்னாலொழிய அவளை இங்கு அனுப்ப வேண்டாம்!" என்றும் சொல்லிவிட்டான்.

* * *

இத்தகைய பழைய எண்ணங்கள் ஒன்றின் மேலொன்றாக எழவே சந்தானத்தின் மனது துன்ப வேதனையால் துடித்தது.

சிந்தனை வெள்ளத்தில் மிதந்து கொண்டிருந்த சந்தானத்திற்கு அஸ்தமித்து வெகு நேரம் ஆனதுகூடத் தெரியவில்லை. பால் போன்ற வெண்ணிலவை வாரிச் சொரிந்துகொண்டிருந்த அந்த வெண்மை இரவில் திடீரென இருள் படர ஆரம்பிக்கவே சட்டென்று எழுந்து மேலே நோக்கினான். அப்போதுதான் அவனுக்கு ஞாபகம் வந்தது, அன்று 'சந்திரக் கிரகணம்' என்று!

மேலே உற்று நோக்கினான். பூர்ண சந்திரனின் உருவம் கொஞ்சம் கொஞ்சமாக இருளில் மறைந்து கொண்டே வந்தது. சற்று நேரத்திற்குள் அநேகமாக முழு மதியும் மறைக்கப்பட்டு விட்டது இருளில்!

இன்பமயமாக ராஜத்துடன் சேர்ந்து பழகிப் படித்து வந்த சந்தானம், அவ

ளுடனேயே தன் வாழ்வைத் தொடங்கவும் முயன்றான். ஆனால் இன்பப் பாதையில் செல்ல நினைத்த அவனது வாழ்வில் ஒரு முற்றுப்புள்ளி! ராஜத்தைப் பிரிந்தான்; அத்துடன் அவனது எதிர்கால வாழ்க்கையையும் வெம்பாக்கிக் கொண்டான். அவனது இன்ப வாழ்வில் இருள் படர்ந்தது! ஒருவேளை அவனது வாழ்விற்கும் ஒரு கிரகணமோ?



ஆனால் சற்று நேரத்திற்கெல்லாம் கிரகணத்திலிருந்து விடுதலை பெற்று விடும் மேலேயுள்ள வான்மதி! அதே போல் அவன் எதிர்நோக்கியிருக்கும் இருண்ட வாழ்விலும் ஒளி விடுமா?

பாவம், வஸுமதி தான் என்ன செய்தாள் அவனுக்கு? அவன் அவ்வளவு தூரம் அவளை வெறுத்தும் அவள் எவ்வளவு அன்புடன் நடந்து கொண்டாள், அவனிடம்! அவனது உள்ளத்தே னும் காதற் போக்கை யறியாமல் சந்தானம் கடின இதயத்துடன் நடந்து கொண்டது எவ்வளவு மதியீனம்? ராஜம் இவனது வாழ்வில் குறுக்கிட்டதைக் கேவலம் சகஜமான கனவுபோல் எண்ணாமல் எதிர்நோக்கியிருக்கும் இன்ப வாழ்வை இருளாக்கிக் கொள்வதில் தான் என்ன நன்மை?

இவ்விதம் திடீரென ஏதோ நல்லுணர்ச்சிகளோடு கூடிய ஆத்ம சக்தியால் சந்தானத்தின் மனது தாண்டப்பட்டது. அதற்குள் மேலே நன்றாக மறைக்கப்பட்டிருந்த வெண்மதியின் உருவமும் மறுபடியும் தெரிய ஆரம்பித்தது. ஆம் கிரகணம் விடுகிறது!

சற்று யோசித்தான் சந்தானம். அப்போதே அவனது மனதை மறைத்திருந்த கற்பனைத் திரை விலகிற்று!

ஏதோ முடிவுக்கு வந்தவன் போல் பரவசமாக எழுந்தான் சந்தானம். மறுதினமே புறப்பட்டு வரும்படி வஸுமதிக்குத் தந்தி கொடுத்து விட்டு வீட்டை அடைந்தான்.

மறுநாள் வஸுமதி வந்து சேர்ந்தாள். அவளை ஏறிட்டுப் பார்க்க முயன்ற அவனது கண்கள், அந்த அன்புத் தெய்வத்தின் முன் கவிழ்ந்து சரணாகதியடைந்தன. "வஸுமதி! என்னை மன்னிப்பாயா?" என்று கேட்டான் சந்தானம்.

"போதும், உங்கள் அசட்டு வார்த்தையெல்லாம்!—அதிருக்கட்டும்; எப்போது தந்தி கொடுத்தீர்கள்? நான் கிரகணம் விட்டதும் வாசற்பக்கம் போனேன். தந்திக்காரன் வந்தான்!" என்றாள் வஸுமதி, கண்களில் ஆனந்தக் கண்ணீர் துளிர்க்க.

"ஆம், வஸு! இந்தக் கிரகணத்துடனேயே நமது வாழ்வைப் பிடித்த கிரகணமும் விட்டுவிட்டது!" என்றபடி அவளது சிவந்த கன்னங்களைச் செல்லமாகக் கிள்ளினான் சந்தானம்.

"போதும், உங்கள் விளையாட்டு! அதோ பாருங்கள், அம்மா வருகிறார்!" என்று சொல்லிக் கொண்டே, அவன் பிடியிலிருந்து வேண்டா வெறுப்புடன் திமிறி ஓடினாள் வஸுமதி.

# நீங்கள் பிரியப்படும் கறிகளுக்கு டால்டா சுவையளிக்கிறது — மேலும் உங்களுக்கு ஊக்கத்தையும் கொடுக்கிறது!

சுவை நிரம்பியது

சுலபமாய் ஜீரணமாகிறது

சுத்தமானது

விடமின் அடங்கியது

டால்டாவினுல் சமைக்கப்படும் உணவு பழுதாகாது! எளிதில் ஜீரணமாகின்றதும், விடமின் நிரம்பியதுமான டால்டா, வழக்கமாக உட்கொள்ளும் தின்பண்டங்களைக் கூட அதன் இனிய வாசனையால் ருசியுள்ள தாக்குகிறது—அதனுல் உங்களுக்கு தினமும் சாப்பிடும் உணவுகளின்மேல் சலிப்பு ஏற்படுவதில்லை. டால்டாவினுல் சமையல் செய்யுங்கள். இச்சுத்தமான சமையலுக்குதவும் சாதனத்தின் அறிந்த சத்தைத்தரும் திறமையைக் கொண்டு உங்கள் உணவைச் சீர்படுத்திக் கொள்ளுங்கள். டால்டா சமையலுக்குகந்த சாதாரண வஸ்து அன்று என்பது ஞாபகமிருக்கட்டும்—அது குடும்பங்களை ஆரோக்கியமுடையதாகச் செய்யும்; அவர்களுக்கு அதிகப்படியான ஊக்கத்தையும் அளிக்கும்.

* ஆங்கிலத்தில் மட்டும் எழுதப்பட்டுள்ள டால்டா சமையல் புத்தகத்தின் உதவியுடன் உங்கள் சாப்பாட்டுத் திட்டத்தை அமையுங்கள். சத்தைத் தரும் திறமைக்கென ஆராய்ந்தெடுத்த சுவையுள்ள 150-க்கு மேற்பட்ட இந்தியத் தின்பண்டங்களைப் பக்குவம் செய்யும் முறைகள் இதில் அடங்கியிருக்கின்றன. உங்கள் புத்தகத்திற்கு Dept. B461 P.O. Box No. 353, Bombay, என்ற விலாசத்திற்கு நான்கு அணு ஸ்டாம்பு அனுப்புங்கள்.




HVM. 40-23 TM

THE HINDUSTAN VANASPATI MANUFACTURING CO., LTD.

